# கபிலர் ஓவியம்



ஆசிரியன் :

மார்க்கபந்து சர்மா, M. A.,

கிடைக்குமிடம் :

**தொல்காப்பியர் நூலகம்**

202, ஜானிஜான்கான் தெரு,

சென்னை - 14.

ஆசிரியர் பொறுப்பில் வெளியிடப்பெற்றது
முதல் பதிப்பு—டிசம்பர் 1961

விலை ரூபாய் 1-50

ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| சிலம்பின்பாயிரம் | 2 | 00 |
| சிலம்பின் இரசனை | 3 | 75 |
| சிலம்பும் மேகலையும் | 1 | 50 |
| குறிஞ்சிக்கலி | 3 | 00 |
| குறிஞ்சிப் பாட்டு | 1 | 50 |

அச்சில்
சிலம்பின் தகுதி
சிலம்பின் ஓவியம்

அச்சிட்டோர்
முத்தையா அச்சகம்,
202, ஜானிஜான்கான் தெரு,
சென்னை-14.

# முன்னுரை

இவ் வாராய்ச்சி இரண்டாண்டுகளுக்கு முன்னர் முகிழ்த்தது. குறிஞ்சிப் பாட்டின் கதை யமைப்பினைப் புலப்படுத்த வேண்டு மெனத் தொடங்கப் பெற்றது. சிலம்பின் ஓவியங்களைக் கண்டது, இதனை வளமுறச் செய்தது. ஓவிய மென்பது என்ன வென்ற ஆராய்ச்சி நம் உள்ளுறை யிறைச்சி என்பவற்றினைப் பற்றிய என் கருத்துகளைத் தெளிவு படுத்தியது. தொல்காப்பியர் அவற்றை அகத்திணை யியலிலும், பொருளியலிலும் கூறி யிருப்பது பொருத்தமுடையது என்பதும் புலப்பட்டது.

உள்ளுறை யுவமம், ஏனை யுவமம் என்பன விரண்டும் ஓவியங்களே யாம். அகத்திணை யியலிற் கூறப் பெறும் ஏனை யுவமம், உவம வியலிற் கூறப் பெறும் உவம மன்று. இது உள்ளுறை யுவமத்துக்குச் சிறப்பளிப்பது. தனித்து நின்றும் உள்ளுறை போல் பொருள் பயக்கும் ஆற்றலுடையது. உள்ளுறை யுவமமும், ஏனை யுவமமும் திணைப் பொருளை யுணர்ந்துகொள்ளப்பயன்படும்.

உள்ளுறை யுவமம் என்பது தெய்வ மொழிந்த கருப் பொருள்களை யடியாகக் கொண்டு பிறப்பது. உவமம் போலவே விளங்குவது. உடனுறை அல்லது இறைச்சி

எனப் படுவது பொருள்காணுங் காலத்து உவமம்போல விரிக்கப் பெறுவது. ஆனால் அது வருணனை போல அமைந்திருக்கும். அது உரிப் பொருளுக்குச் சிறப் பளிப்பது. அதனுடைய பயனைக் குறிப்பிடுவது; உள்ளுறை யுவமம் பொருளை மட்டுமே விளக்கும். பயன் அல்லது விளைவினைக் குறிப்பிடுங் காரணத்தால் தொல்காப்பியர் உடனுறையைப் பொருளியலில் தனியே கூறியுள்ளார்.

உள்ளுறை யுவமம், ஏனை யுவமம், உடனுறை என்ற மூன்றினை விளக்கிக் கூறிய தொல்காப்பியர், இவற்றைச் சேர்த்துத் திரட்டிக் கூறும்பொழுது இவை ஐந்து வகைப் படும் எனக் கூறியுள்ளார். உவம வியலிலும், உவமப் போலி ஐந்தெனக் குறிப்பிட்டுள்ளார், ஐந்தெனத் திரட்டிக் காட்டும் சூத்திரத்தில் மூன்று புதிய பெயர்களைக் காண்கின்றோம், ஏனை யுவமம் என்ற தெரிந்த பெயர் அதன் கண் இடம் பெறவில்லை. ஆகவே இம் மூன்று புதிய பெயர்களும், ஏனை யுவம வகைகள் எனத் தெளியலாம். அவற்றை விளக்காமற் சென்றிருப்பதும் இக் கருத்தை வலி யுறுத்தும்.




ஓவியங்களைப் பெரிதும் போற்றிக் கையாண்ட ஷேக்ஸ்பியர் அவற்றை அமைத்திருக்கும் முறைக்கும்,

கபிலர் அமைத்துக் காட்டியிருக்கும் முறைக்கும் வேறு பாடு காணப்படுகின்றது. ஷேக்ஸ்பியர் ஓவியங்களைக் கொத்து, கொத்தாகத் தோன்றும்படி யமைத்துள்ளார். கபிலர் அவற்றை மாலை போல் விளங்கும்படி அமைத் துள்ளார். ஷேக்ஸ்பியர் அமைப்பு இயற்கையை யொத் திருக்கின்றது. கபிலர் அமைப்பு, கை வல்லான் இயற் கையைப் பயன் படுத்திக் கொள்ளுவதனை நினைப் பூட்டு கின்றது.

இளங்கோ வடிகள் கபிலர் அமைப்பு முறையைக் கையாண்டு, அதனைச் சிறந்து விளங்க வைத்துள்ளார். இறுதிப் பக்கத்தில் சில மாறுதல்கள் தரப்பட்டுள்ளன. இவை யன்றியும், ஒரு சில பிழைகள் இடம் பெற்றிருக் கின்றன. அவற்றைப் படிப்பவர் எளிதில் திருத்திக் கொள்ளலாம் என்றெண்ணிக் குறிப்பிடவில்லை. கபிலர் ஓவியங்களைத் தெரிந்து கொள்ளுவது சிலம்பின் ஓவியங் களைச் சுவைக்க உதவும் என்ற காரணத்தால், இந் நூல் முதலில் வெளி வருகின்றது.

மார்க்கபந்து சர்மா.

10 – 1 – 1962.

# பொருளடக்கம்

# மாற்றங்கள்

| பக்கம் | வரி | இருப்பது | இருப்பின் நல்லது |
|---|---|---|---|
| 21 | 8 | கொண்டவராகவும் | கொண்டிருப்பதனையும் |
| 24 | 25 | பெரும் இந் நீண்ட பட்டியல் | பெரிதும் நீண்ட இப்-பட்டியல் |
| 33 | 15 | கைமாறு | கைம்மாறு |
| 35 | 20 | இப்பாடல் அனைத்தும் | இப்பாடலின் அடிகளனைத்தும் |
| 71 | 72 | வழக்கத்தை | வழக்கத்தின் |
| 91 | 9 | எனவே | ஆனால் |
| ,, | 30 | துதிக்கையை | துதிக்கை |

# கபிலர் ஓவியம்

## 1. நோக்கம்

“ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு’ என்ற விளக்கம் இப் பாடலின் இறுதியில் காணப்படுகின்றது. இப்பாடலின் தோற்றத்துக்குக் காரணம் கூறும் இவ்விளக்கம், இப் பாட்டினைப் பாடியருளிய கபிலரால் தரப்பட்டதன்று. அவர் கருத்தைத் தாமே நேரில் தெரிந்து கொண்டிருந்த வரோ, அல்லது அத்தகையவரால் உணர்த்தப் பெற்று அறிந்து கொண்டிருந்தவரோ இவ்விளக்கத்தைத் தந்தவ ராய் இருக்கவேண்டும். இதனை நாம் ஐயமின்றி அறிந்து கொள்ள இப்பாடலின் அமைப்பும் போக்கும் உதவுகின் றன. இவற்றோடு குறுந்தொகையில் காணப்படும் ஒரு பாடல் (184), ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தனால் இயற்றப் பெற்றதாக அமைந்த பாடல், குறிஞ்சிப் பாட் டினைப் பெற்றுக் கொண்டதற்கு அளித்த நன்றி கூறும் பாடலாக அமைந்திருக்கக் காண்கின்றோம். எனவே, இப் பாடலின் ஈற்றில் காணப்படும் விளக்கம், இது தோன்றி யதற்குக் கூறியிருக்கும் காரணம் உண்மையானதே என் பதனை உறுதியாக ஏற்றுக்கொள்ளலாம்.

புறநானூற்றுப் பாடல்களுக்கு அவற்றைப் பாடிய வர் பெயர், இடம், பாடப்பெற்ற காலம், பாடலின் திணை. துறை முதலிய பல விவரங்களுள் சிலவும் பலவும் ஒவ் வொரு பாடலுக்கும் கிடைக்கின்றன இவற்றை நமக்கு உணர்த்தியுள்ளவர் அப்பாடல்களைப் பாடியவரல்லர்.

அவர்களை நேரில் அறிந்தவரோ, அல்லது அவ்வாறு அறிந் திருந்தவரால் தெரிந்து கொண்டிருந்தவரோ அவ்விவரங் களை நமக்குத் தந்திருக்கின்றனர். அவை கிடைத்திருக்க வில்லையேல் நாம் இப்பொழுது அப்பாடல்களைப் பற்றி அறிந்து கொண்டிருப்பவற்றைத் தெரிந்து கொண்டிராத வராகவே இருப்போம். மேலும் அப்பாடல்களின் பொருள் களையும்கூட, இப்பொழுது சுவைத்து மகிழும் அளவுக்கு, நம்மால் உய்த்துணர்ந்து துய்க்க முடியாமல் இருந்து விட் டிருக்கும். எனவே, அவ்விளக்கங்கள் புறநானூற்றின் பாடல்களின் இன்றியமையாத பகுதிகளாகவே கருதப் படல் வேண்டும். இப்பாடலின் விளக்கமும் அத்தகைய சிறப்புடையதுவே!

இப்பாடலின் இறுதியில் காணப்பெறும் விளக்கம், இதனைப் பாடியவர் பெயர், கேட்டவர் பெயர், பாடிய காரணம் என்ற இம்மூன்று செய்திகளை நமக்கு அறிவிப்ப தனோடு நின்றுவிடவில்லை. இப்பாடலின் உட்பொருளை யும், அமைப்பு முறையையும், தத்துவத்தையும் தெரிந்து கொள்ள இதுவே வழிகாட்டுகின்றது. இவ்விளக்கம் இல்லையேல், நாம் குறிஞ்சிப்பாட்டின் உடலினைப் பெற்ற வராக மட்டுமேயிருப்போம்; அது உயிருடையது, இயங்கு வது என்பதனை உணர்ந்துகொண்டிருக்க முடியாதவராகவே இருப்போம். மேலும் இவ்விளக்கம் இப்பாடலுக்குச்சங்க இலக்கியத்தில் ஓர் ஒப்பற்ற தலைமையை — நிலையை — த் தருகின்றது. இப்பாடலின் நிலையை இது நம்மை உணர்ந்து கொள்ள வைக்கின்றது எனக் கூறுவதே பொருந்தக் கூறுவதாகும். இது இல்லையேல், இப்பாட லின் சிறப்பினை நாம் உணர்ந்து கொள்ள முடியாதாகை யால், இதுவே இப்பாடலுக்குப் பெருமையைத் தேடித் தருவதாகக் கொள்ள வேண்டும்!

தமிழ் இலக்கியமரபுகள் சிறப்பும் பெருமையும் பெற் றன என்பதனை இப்பாடலால் கபிலர் ஆரிய அரசன் ஒரு வனை அறிந்து ஏற்றுக்கொள்ள வைத்திருக்கின்றார். நம்

தகுதியைப் பிறர் அறிந்து ஏற்றுக்கொள்ளுவது அதற்குத் தக்க உயர்வாகுமே யல்லாமல் நாமாகக் கருதிக்கூறும் அதனுடைய சிறப்பு மிகைபடக்கூறலாகவே முடியும். இதனை உணர்ந்தே கபிலர் நம் மொழியின் சிறப்பியல்புகளை வேற்றுமொழியில் வல்லவனான ஓர் அரசனைப் பாராட்டச் செய்திருக்கிறார்! நம்மோடு வேறுப்பட்ட போக்கையும். கலையுணர்ச்சியையும் உடையவரை, நம்மையும் நம்கலையையும் உணர்ந்து கொள்ள வைக்க, அவர்கள் சிறந்ததாகக் கொண்டிருக்கும் கருத்துக்களோடு ஒப்பக் காட்டியே உணர்த்த வேண்டும். இதனைக் கபிலர் திறம்படச் செய்திருப்பதனை ஊன்றிப் பார்த்து உணர்ந்து கொள்ளவைக்க இவ்விளக்கம் நம்மைத் தூண்டுகின்றது. எனவே, இது இப்பாடல் தோன்றக் காரணம் கூறியிருப்பதனோடு, அதனுடைய சிறப்பு, நிலை, தகுதி முதலியவற்றை நம்மைத் தெரிந்து கொள்ளவும் செய்திருக்கின்றது என்பது புலனாகின்றது!

'ஆரிய அரசன் பிரகத்தன்' என்ற பெயரினைக் கொண்டே, இப்பாடலை முதன்முதலிற் கேட்ட பெரும் பேற்றினையும், இதனைக் கபிலரை இயற்றத் தூண்டிய பெருமையையும் நம்மைத் தனக்குப் பெரிதும் கடன்பட்டவராக ஆக்கிக் கொள்ளும் சிறப்பினையும் பெற்று விளங்குபவன் ஓர் அரசன் என்றும், அவன் வேற்று நாட்டிலிருந்து நம் நாட்டுக்கு வந்தவன் என்றும் தெரிந்து கொள்ளலாம். அவன் கேட்க வேண்டும் என்றும், நம் மொழியின் மரபுகளை உணர்ந்து கொள்ளவேண்டும் என்றும் கருதி இயற்றப்பெற்றதாகையால், அவ்வரசன் நம்மொழியை நன்கு பயின்றவனாகவும், இதனிடத்துப் பற்றுக்கொண்டவனாகவும் இருந்திருக்க வேண்டும் என்று விளங்கிக் கொள்ளலாம். இதனை அவன் இயற்றிய பாடல் ஒன்றினைச் சங்கச் செய்யுளாக ஏற்றுக்கொண்டது உறுதிப்படுத்துகின்றது! அப்பாட்லின் போக்கு, பொருள் முதலிய

வற்றைக் காண அவன் நம்மொழியிற் பெரும் புலமை பெற்றவனாய் விளங்குவது புலப்படுகின்றது.

அரசர்கள் பலரையும் சென்று கண்டு, அவர்களைப் பாராட்டிப் பாடி, அதன் பயனாய்ப் பெறும் பரிசிலைக் கொண்டு தம் வாழ்க்கையை நடத்தவேண்டிய நிலையில் கபிலர் இருந்திருக்கவில்லை. அவரைத் தன் கண்ணே போல் காக்கப் பாரி இருந்தான்! இருந்தும் அவர் தமிழ் நாட்டின் பல பகுதிகளுக்குச் சென்றதும், ஒரு சில அரச ரையும், சான்றோரையும் பாராட்டியதும், அவர்கள் மன முவந்து அளித்த பரிசில்களைப் பெற்றதும், அவர் தம் நாட்டின் பல பகுதிகளையும் நேரிற் காணவிரும்பியதனா லும், சென்ற இடங்களிற் கண்ட சான்றோரைப் பாராட்ட வேண்டியது தம் கடமை எனக் கருதியதனாலும், அவர் கள் தமக்கு அளித்த பரிசில்களை ஏற்றுக்கொள்ளுவது தகுதியேயாம் எனக் கொண்டிருந்ததனாலும் நிகழ்ந்த வையே! இல்லையேல், செல்வக் கடுங்கோ வாழியாதன் அவருக்குத் தந்ததாகத் தெரியும்நாடுகளையும். செல்வத்தை யும் அவர் ஏற்றுக் கொண்டாரேயல்லாமல், துய்த்தார் என் பதற்குச் சான்று ஒன்றும் இல்லையே! மூவேந்தரிடத்தில் 'யாமும் பாரியும் உளமே' என்று கூறியிருக்கின்றாரே! பாரி தன் அறத்தையே பொருளாகக் கருதி வாழ்ந்த தனைப் போலவே, கபிலரும் தம் புலமையையே பொரு ளாகக் கருதி வாழ்ந்திருந்தார். இவ்விருவரும், வேறு உடைமைகளைப் பெற்றிருக்க விரும்பவில்லைபோலும்!

பாரியுடன் தம் வாணாட்களில் பெரும்பகுதியைக் கழித்த கபிலர், அவனுடைய வாழ்க்கையோடு பிரித் தறியக்கூடாத முறையில் தம் வாழ்க்கையை நடத்தி வந்தார். அவன் கொலைப்பட்டபின், அவன் நிறைவேற்ற முடியாமற் சென்ற கடமையை நிறைவேற்றவே வாழ்ந் தார். இவர் அவனோடு தொடர்பு கொண்டு வாழ்ந்தது, அவனால் தம்வாழ்க்கை நிறைவேறுகின்றது என்றன்று, அவன் அக்காலத்து மக்களுள் கல்வியும், ஒழுக்கமும்

நிறைந்தவனாய் இருந்தமையாலேயாம்! இத்தகைய உயர்ந்த குறிக்கோள்களை நெகிழாமல் கடைப்பிடித்தவராக விளங்கவேதான் கபிலரைச் சங்கப் புலவர் பலரும் பாராட்டியிருக்கின்றனர்; உளங்கனிந்து, உவந்து வியந்திருக்கின்றனர். இத்தகைய சீரும், சிறப்பும், பேரும், பெருமையும் சங்க காலத்தில் வேறு எப்புலவருக்கும் கிடைத்திருக்கவில்லை. ஆகவே இவர் இப்பாடலைப் பாட முன்வந்தது கேட்போன் ஓர் அரசன் என்ற காரணத்தால் அன்று; அவன் புலவன் என்றேயாம்!

பிரகத்தன் ஒரு புலவன்; வேற்று மொழியில் வல்லவன்; இசையைப் பயின்றவன். அவன் தான் பிறந்த நாட்டினைவிட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்தான்; நாடு பிடிக்கும் நோக்கத்துடன் வரவில்லை; நம் மொழியைப் பயிலவே வந்தான். வந்தவன், தன் புலமை காரணமாக எளிதில் நம்மொழியிலும் பெருந்தேர்ச்சி பெற்றான்; புலவனாக மாறிவிட்டான். இவனைக் கண்ட கபிலர் இவனுடைய தமிழன்பையும், புலமையையும் அறிந்து வியந்தார். அதனைத் தாம் பாராட்டுவதனைக் குறிப்பிடவே, அவன் கேட்க இப்பாடலைப் பாடினார். கபிலர் நம் தலைவராக, நாம் செய்ய வேண்டிய கடமையையே செய்திருக்கின்றார். அவர் பெரும் புலவராய் இருந்தமையால் நாம் செய்யக் கூடியதனைக் காட்டினும் பன்மடங்கு பெருமையுடையதாகத் தம் கடமையைச் செய்திருக்கின்றார்.

பிரகத்தன் தமிழைப் பயின்று புலமை யடைந்து மகிழ்ந்ததனோடு நின்று விடவில்லை. பிற தமிழ்ப் புலவர்கள் தன்னைப் பாராட்டும் முறையிலும், தன்னுடைய பாடலை அவர்கள் தம்முடையவற்றோடு சேர்த்துக் கொள்ளும் வகையிலும் தன் புலமையைப் பயன்படுத்தியிருக்கின்றான். மொழிவல்லாருக்கு இருக்க வேண்டிய சிறந்த பண்பினை அவன் தன் பாடலால் தெரிவித்திருக்கின்றான். அப்பாடலை அவன் தன்னையொத்த வட

மொழிப் புலவரை நோக்கிக் கூறியதுபோல் அமைத்துப் பாடியிருப்பினும், அவனை நம் மொழியிலும் புலமையுடையவனாகப் போற்றுகின்றோம் ஆகையால், நம்மை நோக்கிக் கூறியதாகவும் நாம் கருதிக்கொள்ள வேண்டும். ஒருமொழிவல்லார், பிறமொழியொன்றினைப் பயிலத் தொடங்கும் பொழுது தம்மொழிக்கும், அதற்கும் உள்ள மாறுபாடுகளையும் அல்லது வேற்றுமைகளையும் கவனிப்பதில் கருத்தைச் செலுத்தாமல், அதனுடைய போக்கு மரபு முதலியவற்றைக் கொண்டே தாம்பயிலும் மொழியின் மாண்பினைத் தெரிந்து கொண்டு மகிழவேண்டும் என்பதே அவன் கூறியுள்ள அறிவுரை ! இத்தகைய விருப்பு வெறுப்பில்லாத உயர்ந்த புலவனை-நம் தாய் மொழியினிடத்துப் பற்றுக்கொண்டவனைப் பாராட்டுவது நாம் நம் தாய்மொழிக்குச் செய்யும் தொண்டாகுமேயல்லாமல், அவனைப் பாராட்டிய அளவுடையதாக நின்றுவிடாது. இதனை நன்குணர்ந்தே, கபிலர் தம்பாடலை இயற்றியிருக்கின்றார் ! அவர் செய்தது தமிழ்மொழிக்குச் சிறந்த தொண்டாகும் ! அதுவே, பின்னர் இளங்கோவடிகளை ஒரு பெருங்காப்பியத்தை இயற்றத் தூண்டிற்று என்பதனை நாம் அறிந்து கொள்ளும்பொழுது, கபிலருடைய பாட்டின் நிலை நமக்கு நன்கு புலனாகும் !

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதலை விரும்பாதவரும் இருப்பரோ ? அவ்வாறு விரும்புவது அவருடைய புலமைக்கு அழகாகுமன்றோ ? பிரகத்தன் ஒரு புலவன்; இருமொழிகளில் வல்லவன், இசைப்பயிற்சியும் பெற்றவன் என்பதனை அவன்பெயராலேயே தெரிந்து கொள்ளுகின்றோம். இத்தகைய பெரும் புலவன், நாம் வியக்கத்தக்க, உணர்ந்து பின்பற்ற வேண்டிய, குணமாட்சியுடையவனாகவும் விளங்கினான். சான்றோர் பெருமையை இயன்ற இடங்களில் எல்லாம் பாராட்டுவதனைத் தம் கடமையாகக் கொண்டிருந்த கபிலர், இத்தகைய சான்றோனைப் பாராட்ட முன்வந்தது வியப்பாகுமா ? நம்

தமிழன்னை செய்த தவப் பயனுய்க் கபிலருடைய பாராட்டுரை ஒரு பாடலாய் வெளிவந்தது. அது சங்க இலக்கியத்தில் தனக்கெனத் தலைமையான நிலையைப் பெற்றதனோடு, காப்பிய இலக்கியத்தில் உலகிற்கே உயர்ந்ததாக விளங்கும் ஒரு பெருநூலை இளங்கோ வடிகளை இயற்றத் தூண்டியிருக்கின்றது!

பிரகத்தனைப் பாராட்டப்பாடிய பாடலில் கபிலர் அவன் பெயரைப் புகுத்தாமலும், அவன் புலமையைப் புகழாமலும். அவன் குணமாண்புகளை வியக்காமலும் சென்றிருக்கின்றுரே ! ஆம்; அவன் இத்தகைய பாராட்டு ரையைப் பெற்றிருக்க முடியாது ! அவனுடைய பெயர் குறிப்பிடப் பெற்ற பாடலைக் கபிலர் இயற்றி யிருந்திருந்தால், அது இரண்டாயிரம் சங்கப் பாடல் களுள் ஒன்றுய்இருக்கும் இயல்புடையதாகவே இருந்து விட்டிருக்கும் ! அதனை ஒன்றிரண்டு முறைகளுக்கு மேல் நாம் படிக்க வேண்டியிருக்காது ! ஆனுல் இப் பொழுதோ? குறிஞ்சிப் பாட்டு சங்க இலக்கியத்தின் சிறப்பு மிக்க ஓவியமாய் விளங்குகின்றது ! அதனைப் பன்முறை பயின்றுலும், மேலும், மேலும் நம்மைப் பயின்று மகிழத் தூண்டுகின்றது ! ஒவ்வொரு முறையும் நாம் அதனைப் படித்து முடித்தவுடன், இப்பாடலை நமக்குக் கபிலரை அளிக்கவைத்த பிரகத்தனை நாம் போற்றுகின்றோம் ! எனவே, அவன் பெயரைக் குறிப் பிடாமல் சென்றிருக் கின்றுரேயெனினும், கபிலர் உண்மையில் அவன் பெயரை நிலைத்திருக்கச் செய்தி ருக்கின்றுர் !

கபிலருடைய குறிஞ்சிப்பாட்டு உள்ளவரையில் பிரகத் தன் பெயரும் நிலைபெற்றிருக்கும் ! அதனைப் பாராட்டும் புலவர் அவனையும் பாராட்டுவர் ! இவற்றை யுணர்ந்தே கபிலர் அவன் பெயரைக் குறிப்பிடவில்லை ! அவருடைய கருத்தை நாம் உணர்ந்து கொண்டுவிட்டோம் ! ஆனுல் அவர் எவனுக்காக, எவனைப் பாராட்ட வேண்டுமென்று

இப்பாடலைப் பாடியருளினரோ, அவன் அவர் கருத்தைத் தெரிந்து கொண்டானு? அப்பொழுதன்றே இப் பாடல் அவனைப் பாராட்ட எழுந்தது என்பது உறுதி யாகும்? இரண்டாயிரம் வருடங்களுக்குப்பின், கபிலர் கருத்தை உணர்ந்துகொண்டு விட்டோம் என்று மகிழும் நாம், அவரை நேரிற்கண்டு அவருடைய பாராட்டுரையைப் பெற்றவன் அதனை அறிந்துகொண்டிருக்க மாட்டான் என்று எண்ணுவது எப்படிப் பொருந்தும்? இது வாதத்தினுல் உண்மையை உணர்த்துவதாகும்.

நம் நற்பயனுய் இவ்வுண்மையைச் சான்றுகாட்டியும் நிலைநாட்டும் நிலையில் நாம் இருக்கின்ருேம்! கபிலருடைய பாராட்டுரையைப் பெற்ற பெரு வேந்தன், தன் ஆசிரியருக்கு நன்றிகூறும் முறையில் ஒரு பாடலை இயற்றியுள்ளான்? அதனுல், அவன் அவர் தன் பெயரைத் தமிழ் உள்ளளவும் நிலைபெறுத்தி யிருப்பதனை யுணர்ந்து கொண்டு நன்றி செலுத்தியிருப்பதனைக் காண்கின்ருேம். தன் ஆசிரியர் கையாண்டிருக்கும் முறையையே, அவனும் பின்பற்றி யிருக்கின்ருன். கபிலருடைய பெயர் அப்பாடலில் குறிப்பிடப் பெறவில்லை; எனினும் அது கபிலரையே குறிக்கும் என எளிதில் நாம் கண்டுகொள்ளும்படி அமைந்திருக்கின்றது!

பிரகத்தனுடைய தமிழன்பையும், புலமையையும் வியந்து பாராட்டுவதற்காகவே கபிலர் குறிஞ்சிப் பாட்டைப் பாடியிருக்கின்ருரா? இல்லை; அவனை வாயிலாக அமைத்துக்கொண்டு அவர் நமக்கு வழிகாட்டியவராக விளங்கும்படியே இப்பாடலை இயற்றியிருக்கின்ருர்! இப் பாடலைப் பிரகத்தன் கேட்கப் பாடியமையால், உண்மைப் புலமைக்குப் பிற நாட்டார் வணக்கஞ் செலுத்துவர் என் பதனை நமக்குக் கபிலர் நன்ருக விளங்க வைத்துவிட்டார். இதனுல் நம்மையும் தமிழ்ப்பற்றுக் கொள்ளுமாறும், பிரகத்தனைப்போல் புலமை யெய்தித்திகழ வேண்டும் என்ற அவாவினை மேற்கொள்ளுமாறும், அவனைப்போல் நாமும் புலமையை எம்மொழியிற் காணினும் அதனைப் பாராட்டி

மகிழப் பழகிக்கொள்ளுமாறும், கபிலர் நமக்கு இப்பாடலால் அறிவுறுத்தியிருக்கின்றார். எனவே, இப்பாடல் நமக்காகவே இயற்றப்பட்டது; பிரகத்தன் நம் சார்பில் இதனைக் கபிலரிடமிருந்து பெற்றான்! கபிலர் இப்பாடலைப் பாடியதனால் விளக்கிக் காட்டியிருக்கும் வழியிற் செல்லுவது, நம்மையும் அவரைப்போல் பிறநாட்டவரும் விரும்பிப் பாராட்டப் பெறும் உயர்ந்த நிலையை எய்தச் செய்யும் என்பது உறுதி!

பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்காகக் கபிலர் பாடியருளிய இப்பாடலை, தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்து தமிழைத்தாய் மொழியாகக் கொண்டுள்ள நாம் முயன்று விளங்கிக் கொள்ள வேண்டிய நிலையில் இருக்கின்றோம்! எனினும் இது கடுகளவும் நமக்குச் சிறுமையைப் பயப்பதாகாது! வேற்று நாட்டவனே எனினும், பிரகத்தன் பெரும் புலவன்! இப்பாடலின் போக்கும் நடையும் அவனுடைய தமிழ்ப்பயிற்சியின் எல்லையையும், தமிழன்பின் மாட்சியையுமே குறிப்பிடும்! அவனுடைய பாடலை ஆராயுங்காலத்து, அவனுடைய சிறப்பியல்புகளை நாம் தெரிந்து கொள்ளலாம். இத்தகைய பெரும் புலவனைத் தன்னை ஆசிரியனாக ஏற்றுக்கொள்ளும்படிச் செய்த கபிலர் எத்துணைத் தேர்ச்சியும், முதிர்ச்சியும் பெற்றவராக இருந்திருக்கவேண்டும்! இவ்வளவும் தெரிந்த பின்னரும், நாம் இவர் பாடலை நன்கு கற்காவிடின், அவர் காட்டிய வழியில் செல்லும் முறையில் நம்மைப் பழக்கிக்கொள்ளாவிடின், — அப்பொழுதே நாம் நமக்குச் சிறுமையைத் தேடிக்கொண்டவராவோம்! இப்பாடலைப் பயிலத் தொடங்கியிருப்பதே, நம் பெருமையைக்காட்டப் போதுமானது! இதனை அன்று பிரகத்தன் உணர்ந்துகொண்டு பயன் பெற்ற முறையில், நாமும் உணர்ந்துகொண்டு பயனுற்றோமானால்—அவன் தன் பாடலில் தெரிவித்துள்ள கருத்துக்களை நம் கருத்துக்களாக கொள்ளும் மன நிலையை நாம் எய்திவிட்டோம்

நம்முடைய நிலை அப்பிரகத்தனுடைய நிலையினும் உயர்ந்ததாகிவிடும்! கபிலர் தம்மைப் பின்பற்றுபவரைத் தம் நிலையை எய்தும்படியே விரும்பியிருப்பர்!

'தமிழறிவித்தல்' என்றது, தமிழ்மொழியைப் பயிற்றுவித்தல் என்று பொருள்படாது! ஏனெனில், கபிலரைக் காணவந்த வேந்தன் ஒரு பெரும் புலவனாய் விளங்கினான்! சங்கப்புலவர் தம்மோடு ஒத்தவன் என்று ஏற்றுக்கொள்ளத்தக்க பெரும் புலவனாய்த் திகழ்ந்திருந்தான்! ஆயின் இப்பாடலின் இறுதியில் உள்ள விளக்கம் கருதியது எதனை? அது தமிழ்' என்ற சொல்லை எப் பொருளில் வழங்கியிருக்கின்றது?

'தள்ளாப் பொருள் இயல்பின் தண்தமிழ் ஆய்வந்திலார், கொள்ளார் இக்குன்று பயன்.' (பரிபா, 9:25, 6) இது செவ்வேளைச் சிறப்பிக்கக் குன்றம் பூதனாரால் பாடப் பெற்ற பரிபாடலின் பகுதி. பரிமேலழகர் இப்பகுதிக்கு, 'இப்புணர்ச்சியை (களவு) வேண்டுகின்ற பொருளிலக்கணத்தையுடைய தமிழை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தைக் கொள்ளமாட்டார்' என்று உரைகூறியுள்ளார். இவர் கருத்து பிற புலவராலும் போற்றப்பட்டிருக்கின்றது. 'இந்நூல் என்னுதலிற்றோ எனின், தமிழ்நுதலிற்று என்பது'. இது இறையனார் அகப்பொருள் உரைகாரர் கருத்து. இவர் இந்நூல் சிறப்பினால் இப்பெயர் பெற்றது என்று விளக்கியிருக்கின்றார். 'சிறப்பினால் பெயர் பெற்றது களவியல் என்பது. என்னை? களவு, கற்பு என்னும் கைகோள் இரண்டனுள் களவினைச் சிறப்புடைத்து என்று வேண்டும் இவ்வாசிரியன். என்னை? முற்படப் புணராச் சொல்லின் மையிற் கற்பெனப் படுவது களவின் வழித்தே (இறை: 15, என்று வேண்டுதலின் கற்பு களவுபோல ஒரு தலையான அன்பிற்று அன்று'.

இவற்றால் பொருளிலக்கணம் உடைமையே சிறப்பாம் என்றும்; அவ்விலக்கணத்தில், தமிழ் மொழிக்குச் சிறப்

பாய் அமைவது களவொழுக்கம் என்றும், ஆகவே தமிழ் எனும் சொல் களவினைக் குறிப்பிடும் என்றும் விளங்குகின்றன. 'என் பயக்குமோ இது கற்க எனின். வீடுபேறு பயக்கும் என்பது' என்ற களவியல் உரைகாரர் கருத்தினைக் கபிலர் தம்பாடலால் தெளிவித்திருப்பதனை உணர்ந்த புலவரே இப்பாடலுக்குக் காணப்படும் விளக்கத்தைத் தந்திருக்கின்றார். எனவே, 'தமிழறிவித்தல்' என்பது வீடுபேற்றினைப்பெற நம்மவர் கையாண்ட வழிமுறைகளை அறிவித்தல் என்று பொருள் படுகின்றது. இப்பாடலைப் பெறும் பேற்றினைச் செய்திருந்த பிரகத்தன் வீடுபெற்றவர் நிலையை எய்தியவனைப் போலவே தன் கருத்தை வெளிப்படுத்தியிருப்பதனைக் காணலாம்!

பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்குத் தொடங்கிய கபிலர், களவொழுக்கத்தினை விரிவாகக்கூறி, அதன் பயனையும் வற்புறுத்திக் குறிப்பிடும் முறையில் ஒரு பாடலை இயற்றியது மிகப்பொருத்தமுடைய செயலேயாம்! தமிழுக்கே யுரிய தனிச்சிறப்புடையது களவொழுக்கம். அதனை உணர்த்துவதே தமிழ் அறிவிப்பதாகும்! கேட்போனும் புலவன் ஆகையால், அவன் மொழி மரபுக்கும், தமிழ் மொழி மரபுக்கும் பொதுவாக அமைவனவற்றைக் கூற வேண்டியதில்லையன்றோ? தமிழின் சிறப்பினை உணர்த்த விரும்பியவர், கேட்போன் தாய்மொழியாகிய வடமொழியின் மரபினை யுணர்ந்து, அதனால் சிறப்பாகக் கருதப்பெறும் நாற்பொருளையும், இக்களவொழுக்கம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்றது என்பதனைக் காட்டியுள்ளார்! இது அவன் மனங்கொள்ளக் கூறிய உத்தியாக அமைவதுடன், உண்மையும், நம்மொழியின் மரபுகளை வகுத்தமைத்த ஆன்றோரின் கருத்தும் ஆம்!

# 2. நிறைவேற்றம்

குறிஞ்சிப் பாட்டைப் பாடிய கபிலர் வேற்றுமொழி ஒன்றினில் வல்லவனுயிருந்த வேந்தனுக்குத் தமிழ் அறிவுறுத்த அதனை இயற்றினுர் என்றமையால், அது நம் மொழிக்குரிய சிறப்பியல்புகளை நன்கு எடுத்துக்காட்டுவதாய், இதனுடைய மரபின் மாண்புகளைப் புலப்படுத்துவதாய், நம் இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் பண்பாட்டிற்கும் சான்ருக இருந்து ஏற்றம் அளிப்பதாய் இருக்கும் என எதிர்பார்த்தல் இயல்பே! இவற்றை இப்பாடல் நன்கு நிறைவேற்றியிருக்கின்றது. சங்க இலக்கியத்தின் போக்கைப் பெற்று நடப்பது போல் இயன்று, ஒரு புதுநெறியை வகுத்துத் தந்திருக்கின்றது கபிலரை இப்புதுநெறியை வகுத்தளிக்கத் தூண்டியவன் அவர் பாடலைக் கேட்டோணுகிய பிரகத்தனே! அவனுடைய வடமொழிப் புலமையை நினைவிற்கொண்டு, அம்மொழி இலக்கியத்தின் போக்கினையும் மரபையும் கருத்துட் கொண்டவராய்க் கபிலர் தம் பாடலை இயற்றியிருக்கின்ருர். நம் மரபினின்றும் வழாமலும், வடமொழி மரபை ஒட்டியும் இவர் வகுத்த புதுநெறியே, பின்னர் இளங்கோவடிகளை, தாம் கண்ட உண்மையைக் காஞ்சிப் பாடலாகப் பாடி விடாமல், ஒரு பெருங்காப்பியத்தின் வாயிலாய் வெளிப்படுத்த வைத்திருக்கின்றது!

மக்கள் வாழ்க்கையை அகம் புறம் எனக் கூறுபடுத்தி ஆராய்ந்திருப்பது நம்மொழிப் புலவரின் தனிச் சிறப்பாகும். வடமொழிப் புலவர் வாழ்க்கையின் பயனைக் கருத்துட்கொண்டு, அதற்கேற்ப அறம், பொருள், இன்பம், வீடு

என்ற நான்கு பொருள்களைப் புலப்படுத்துவனவாய்த் தம் இலக்கியப் படைப்புக்களைச் சமைத்தனர். பயன் இன்றிய மையாததா, அப்பயனைப் பெறக் கையாளும் நெறி இன்றி யமையாததா என்ற ஆராய்ச்சி மக்கள் தோன்றிய காலத் திலேயே உடன்தோன்றியிருக்க வேண்டும். நல்லாற்றிற் சென்று, நற்பயனைப் பெறுதலை எல்லோரும் ஒப்ப ஏற்றுக் கொள்ளுவரேனும், பலர் பயனில் பெருங்கருத்துக் கொண்டவராகவும், ஒரு சிலர் பயனை நினையாது நெறியில் கவனம் செலுத்துவதனையும் நாம் காண்கின்றோம். பயன் விளைவதனைக் கட்டுப்படுத்தவோ, மாற்றவோ நம்மால் இயலாதாகையால், நெறியில் கருத்துடைமையே சிறந்தது என்பது இவர்கள் நோக்கம். நாம் விழையும் பயன்களைப் பெறவேண்டும் என்ற விருப்பம் வல்லமையுடையதாக இருந்தால் அல்லாமல், நல்லாற்றில் செல்லவேண்டும் என்ற விருப்பம் தோன்றாது என்பது ஒரு சாரார் கருத்து. இவ்விரண்டுவகை மனநிலைகளை விளக்குவனவாக நம் மொழியில் தோன்றியிருக்கும் முதற்காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் நடந்து செல்கின்றன. சிலம்பு பயனையும், மேகலை வழியையும் வற்புறுத்துவன வாய் இயங்குகின்றன.

நம்முடைய தொல்காப்பியம் தோன்றிய காலத்தில், கிரேக்க நாட்டில் அரிஸ்தோத்தல் என்ற பேரறிஞர் வாழ்ந்து வந்தார். அவர் தமக்கு முன்னர்த் தோன்றிப் பெரும் சிறப்பினைப் பெற்றிருந்த ஹோமரின் பெருங் காப்பியங்களையும், தம் காலத்தே தோன்றிய நாடகங்களை யும் ஆராய்ந்து 'கவிதை இலக்கணம்' என்ற ஒரு சிறு நூலை இயற்றியிருக்கின்றார். இதுவே மேல்நாட்டு மொழி கள் அனைத்திற்கும் பல நூற்றாண்டுக் காலம் பொருளிலக் கணமாய் விளங்கி வந்தது. கிருஸ்து சகத்தொடக்கத்துக் கும் சில நூற்றாண்டுகளுக்குப் பின்னரே வடமொழியில் நாடகங்கள் தோன்றத் தொடங்கின. அவை தோன்றிய பிறகே அம்மொழிவல்லார் பொருளிலக்கணம் வகுத்துக்

கொண்டனர். அரிஸ்தோத்தலின் விதிகளுக்கும், வட மொழிநூலார் வகுத்த விதிகளுக்கும் இடையே வேறுபாடு கள் காணப் பெறினும், அவர்கள் அனைவருக்கும் இலக் கியங்களாய் அமைந்த நூல்கள் ஒருவகையில் ஒப்புமை யுடையனவே. அவை கதை தழுவிய பெருநூல்களையே — பல செய்யுட்களும், உறுப்புக்களும் சேர்ந்த பெரும்பிண்டத் தையே — இலக்கிய வாயிலாகக் கொண்டிருக்கின்றன.

நம்முடைய பொருளதிகாரம் இதற்கு நேர்மாறான கருத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கின் றது. சின்னஞ்சிறு தனிச் செய்யுட்களே தொல்காப்பிய ரால் இலக்கிய வாயில்களாகக் கொள்ளப்பட்டிருக்கின் றன. அவர் நூலைப்பற்றியும், அதன் உறுப்புக்களைப் பற்றியும் கூறுவன அனைத்தும் இலக்கண நூல்களைக் கருதியனவேயாம்! இதனால் சிலப்பதிகாரத்தைப் போன்ற பெருநூல்களை இயற்றும் வழியை நம் முன்னோர் வகுத் துக் கொண்டிருக்கவில்லை என்பது புலப்படும். பயனைக் கருதிப் பார்க்காமல் நெறியிற் கவனம் செலுத்துவோ ருக்குச் சிறு கவிதைகளே சிறந்த வாயிலாகும். பல பகுதி களைக் கொண்ட ஒரு பிண்டத்தைத் தோற்றுவிப்பது, பயனைக் கருதியேயாம்! இவ்வாறு முடிந்த பயனை மட்டுமே கருதுபவர், அதனைப்பெறக் கையாண்ட வழிகளை ஏற்க வேண்டிய பொறுப்புடையவராக ஆகின்றனர். ஒரு சில வேண்டாத செயல்களையும் அவர்கள் பயனில் கருத்து டையவராய் ஒப்பவேண்டி நேரும். எனவே வாழ்க் கையை முற்றிலும் சித்திரிக்கும் பெருநூல்கள், நம்மொழி யில் தோன்றாமல் இருந்தது வியப்புக்குரியதன்று! மக்களு டைய ஒழுகலாற்றின் கூறுகளை விளக்குவதனையே கருத் தாகக் கொண்டிருந்தவர் சிறு செய்யுட்களை இயற்றுவ தனையே கருத்தாகக் கொண்டிருந்தனர்! இவற்றிலும்கூட ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு நிகழ்ச்சியை மட்டுமே சித்திரிப்பதனை நாம் கருதிப்பார்க்க வேண்டும்! ஒன்றுக்கு

மேற்பட்ட நிகழ்ச்சிகளைக்கூறின் வழுக்களை அமைதியுடையனவாகக் காட்ட வேண்டிவரும் என அப்புலவர் அஞ்சினர் போலும்!

குறிஞ்சிப் பாட்டைக் கேட்ட பிரகத்தனும், அதனைப் பாடிய கபிலரும் தம்முள் வேறுபட்ட மரபுகளைப் போற்றுபவராய் இருந்தனர். பிரகத்தன் பயின்றிருக்கக் கூடியவை இராமாயணம், பாரதம், புராணங்கள் போன்ற பெருநூல்கள்! ஆனால் கபிலர் போற்றும் மரபோ சின்னஞ்சிறு கவிதைகளை இயற்றுவதனையே ஆதரிப்பதாகும்! பல்லாயிரக்கணக்கான சுலோகங்களைக் கொண்டவையாய், கதைகளை யுள்ளிட்டவையாய் அமைந்த பெருநூல்களைப் பயின்று மகிழ்ந்த பிரகத்தனுக்கு ஒரு சிறு செய்யுளைக் கேட்பதனால் மனநிறைவு தோன்றக்கூடுமா? எனவே, கபிலர் முதன் முதலாகத் தமிழ் இலக்கியத்தில் ஒரு சிறு கதையைக் கூற முன் வந்தார்! தாம் கூறவந்த கதையை நம் மரபுக்கு முற்றிலும் ஒத்திருப்பதுபோல் காட்ட அவர் அறத்தொடு நிற்றல் என்ற ஒரு துறையை விளக்க எடுத்துக்கொண்டு, அதனோடு தொடர்புடைய வேறு செய்திகளையும் சேர்த்துக் கூறியிருக்கின்றார். தம் பாடலைக் கேட்பவன் பயனில் கருத்துக் கொண்டவனுகையால், தலைவன் தெளிவகப்படுத்தியதனைப் புகுத்தித் தாம் கூறவந்ததனை முடிவுடைய கதையாக மாற்றியதனோடு, பிரகத்தன் விரும்பும் நாற்பயன்களும் பயக்க இத்தலைவன் தலைவியர் வாழ்க்கை நிகழும் எனக் குறிப்பிட்டிருக்கின்றார். சங்கப் பாடல்களில், 'நின்னைப் பிரியேன், பிரியின் ஆவிதரியேன்' என்பதே தெளிவகப் படுத்தலின் வாய்பாடு. அதனைக் கபிலர் 'அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் பயக்கும் நல்வாழ்வை நாம் நடத்துவோம் அஞ்சற்க' எனத் தலைவன் கூறியதுபோல் மாற்றிக் கூறிப் பிரகத்தனை மகிழ்வித்தார்! இதனால் ஒரு கதையை முடியக்கூறி, இளங்கோவடிகளுக்கு ஒரு புதிய அமைப்பு முறையை வகுத்தளித்தார்!

பெருநூல்களைப் பயின்று சுவைத்த பிரகத்தனுக்கு, எத்துணைச் சிறப்புடையதாய் இருப்பினும், ஒரு சில அடிகளைக்கொண்ட ஒரு செய்யுள் உள்ள நிறைவைக் கொடுக்குமா? எனவே, கபிலர் தம்பாடலைப் பெரிய அளவுடையதாகப் பாடியிருக்கின்றார்! கேட்போனுக்காகத் தம் பாடலின் அடிஎல்லையைப் பெருக்க விரும்பிய கபிலர், நம் மொழிமரபினை அவனுக்காகப் புறக்கணிக்கவில்லை என்பதனை அவனும், நாமும் உணர்ந்துகொள்ள வைத்திருக்கின்றார். தொல்காப்பியர் ஆசிரியப்பா ஆயிரம் அடிகள் வரை பெருகலாம் எனக் கூறியிருக்கின்றாரே யெனினும் கபிலர் தம்பாடலை அவ்வளவில் நான்கில் ஒரு பங்கு உடையதாகவே அமைத்திருக்கின்றார்! இதனால் அவர் கேட்போனை உவப்பித்ததனோடு, நம் கோட்பாடுகளையும், ஒரு சிறிதும் விட்டுக்கொடுக்கவில்லை என்பது விளங்கும்! பிரகத்தன் பயின்ற பார நூல்களின் அளவை நோக்க, குறிஞ்சிப் பாட்டின் அளவு மிகமிகச் சிறியது! எனவே, அவனை இப்பாடலைப் பயிலும் காலத்தில் ஒரு பெருநூலை ஓதுகின்றோம் என்று எண்ணிக் கொள்ளும் படிச் செய்யக் கபிலர் ஒரு நல்ல உத்தியைக் கையாண்டிருக்கின்றார். கதையைத் தொடங்கியவுடன் தலைவியும் தோழியும் பூப்பறித்ததாகச் சொல்லியவர், அவர்கள் பறித்திருக்க முடியாத அளவுக்கு 99 வகைப் பூக்களைப் பறித்தனர் போல, அவற்றின் பெயர்களையும், சிலவற்றின் இயல்புகளையும் குறிப்பிட்டிருக்கின்றார். குறிஞ்சிப் பாட்டினைப் படிப்பவர் பெரும் இந்நீண்ட பட்டியலைப் படிக்கத் தொடங்கியதும், இது எப்பொழுது முடியும்என ஏங்குவர்! இதனைப் படித்து முடித்ததும், ஒரு பெருநூலின் பெரிய படலம் ஒன்றினைப் படித்த மன அயர்ச்சியைப் பெறுவர்! முப்பது அடிகளைச் சேர்த்துக்கொண்டு, கபிலர் பெற்ற பயன் விவரிக்க முடியாதது. எனினும் உணர்ந்து மகிழக்கூடியது! இவ்வாறே இப்பாடலின் முடிவில் இவர் மாலையின் வரவையும் பெருக்கிக் காட்டியிருப்பதனைக் காணலாம்!

பிரகத்தன் ஒரு வடமொழிப்புலவன். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் பயக்காத பாடலோ, நூலோ அவனால் முடிந்த பொருளைக் கூறுவ தொன்றாகக் கருத முடியாது! மூன்றன் பகுதி கூறுதல் நம் மரபுக்கு ஒத்ததே! அறத்தாற் பொருள் செய்து, அப் பொருளால் இன்பம் துய்த்தல் வாழ்க்கையின் பண்பாகும் எனக்காட்டுவதே அது! ஆயின் அது வாழ்க்கையின் பயனைக் குறிப்பிடவில்லையே! பண்புடைய வாழ்க்கை நல்ல பயனை அளிக்கும் என்பது உறுதி! எனினும் அதனை யும் குறிப்பிடுவதன்றோ படிப்பவரை அப்பண்புடைய வாழ்க்கையை மேற்கொள்ளத் தூண்டும்? எனவே பிரகத் தன் விரும்பும்வண்ணம், பயனையும் கூறக் கபிலர் விழைந் தார். தலைவன் தெளிவகப்படுத்திய பகுதியைப் 'பயனி லும் கருத்துடையவன் அவன்' என்று பொருள்படும்படி அமைத்திருக்கின்றார். கேட்போனை மகிழ்விக்க இதனைக் கபிலர் செய்திருக்கின்றாரேயெனினும், நம் மரபை அவர் மாற்றியிருக்கவில்லை. மூன்றன் பகுதி கூறுதலை நெகிழ விட்டு நான்கன் பகுதி கூறுதலாக அமைத்துக் கொண் டார்!

உவமைகளையும், சொற்களையும் திரும்பத் திரும்பக் கூறும் வழக்கம் ஓர் உத்தியாகும்! இதனைப் பாரநூல்கள் அனைத்தும் போற்றுவதனைக் காணலாம்! எம்மொழியில் இயன்ற நூலேனும், பெருநூல்களில் இவ்வுத்தி காணப் படும்! மொழி வேறுபாடு பெருநூல்களுக்கு இன்றியமை யாத இப்பொதுப் பண்பினை மாற்றியிருக்கவில்லை. சொற்களோ, உவமைகளோ, வருணனைகளோ திரும்பத் திரும்ப வரும்படி அமைப்பதனால் ஒரு பெருங்காப்பி யத்தை இசைவுடையதாகவும், சுவை பயப்பதாகவும், செய்ய முடிகின்றது! மேலும் இவ்விரகினைக் கையாள்வ தால் கதையின் பல்வேறு பகுதிகளையும் படிப்பவரை அடிக்கடி ஒருசேரக் கருதிப் பார்க்கவைக்க முடியும்! பார நூலை இயற்ற முன் வருபவர், அது சிறியதே என்ற

எண்ணத்தைப் படிப்பவருக்குத் தோற்றுவிக்க வேண்டியவராயும் இருக்கின்றார்; இல்லையேல் அதன் அளவு உள்ளச்சோர்வை உண்டாக்கிவிடுமே!

கபிலர் ஒரு சிறுபாடலை—காப்பியங்களைக் கருத அது சிறு பாடலே—இயற்றியிருக்கின்றாரேனும், அதனைப் பெருநூலை இயற்றுவார் கையாளும் பல உத்திகளையும் கையாண்டு சுவையுடையதாய்ச் செய்திருக்கின்றார்! தலைவன் ஒருவனோடு இத்தலைவி கொண்ட தொடர்பினை ஏமஞ்சான்றது என்ற பாடலின் முதலில் கூறிய தோழி, பின்னர் அவன் சூளுற்றதனை 'ஏம் உறுவஞ்சினம்' என்று குறிப்பிட்டிருக்கின்றாள். பாடலின் தொடக்கத்தில் தலைவியின் நுதலை ஒள்நுதல் என்று குறிப்பிட்டவள் பின்னர்ப் பல இடங்களில் அதனுடைய அவ்வியல்பைக் குறிப்பிட்டிருப்பதனைக் காணலாம்! தலைவன் வரும் பொழுது அவனை வேறுபுலத்து ஆகாண் விடையினுக்கு ஒப்பிட்டவர், பின்னர் அவன் தலைவியையும் தோழியையும் அவர்களுடைய ஊர்எல்லை வரை சென்று வழிவிட்டதனைக் கூறும் காலத்தில் 'துணைபுணர் ஏற்றுக்கு' ஒப்பாகக் கூறியிருக்கின்றார்!

கபிலர் தாம் ஏற்றுக்கொண்ட பொறுப்பின் தன்மைகளை நுனித்துணர்ந்து, அவையனைத்தும் நன்கு நிறைவேறும் முறையில் தம் பாடலை அமைத்துப் பாடியிருக்கின்றார் என்பது புலப்படுகின்றது! சங்க காலத்தில் எல்லாப் புலவராலும் ஒப்பச் சிறப்பிக்கப் பெற்ற இப் பெரியார், ஒரு பெரும்புலவனைப் பாராட்டப் பாடிய பாடல், அவனை மகிழ்வித்து, அவன் பெயரை நிலை பெறுத்தியிருப்பதனோடு நம்மையும் மகிழ்வூட்டிச் சான்றோராக உயர்த்திக்கொண்டு வாழத் தூண்டுகின்றது! இப்பாடல் இளங்கோவடிகளைப் பெரிதும் மகிழ்வுறுத்தி, அவரைப் புத்தம் புதிய அமைப்பு முறை ஒன்றினை வகுத்துக்கொள்ள வழிகாட்டியதில் வியப்பில்லையன்றோ!

# 3. நன்றியுரை

குறுந்தொகையுள் ஒரு பாடலாக இடம்பெற்று விளங்குவது 'அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை' (184) என்று தொடங்கும் பிரகத்தன் பாட்டு. இத் தொகையில் இப்பாட்டை இயற்றியவன் ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன் என்ற பெயருடையவன் என்று காணப்படுகின்றது. ஆரிய அரசருள் எத்தனை பேர் தமிழைப் பயின்று அம்மொழியில் சங்க இலக்கியத்தில் சேர்த்துக் கொள்ளக்கூடிய சிறப்புடைய பாடலைப்பாடி யிருந்திருப்பர்? எனவே பிரகத்தன், பிரமதத்தன் என்று வேறுபடக் காணும் இருபெயர்களும் ஒருவனைக் குறிப் பிடுவனவே எனக் கருதலாம் அன்றோ? இவ்விரு பெயர் களிடையே காணப்படும் வேற்றுமையை ஏடெழுதியவர் நமக்களித்த செல்வம் என்று நாம் கொள்ளவேண்டும்! இக் குறுந்தொகைப் பாடல் ஏழு அடிகளையே உடைய சின்னஞ்சிறு பாட்டாகும்! எனினும் பொருத்தமாய் அமை யும் ஐந்து பாட வேறுபாடுகள் இப்பாடலுக்குக் காணப் படுகின்றன! பிரமதத்தன் என்பது அவைகளைப் போன்ற தொன்றே!

இப்பாடல் நமக்குப் புதிதாகத் தெரிவிக்கும் ஒரு செய்தி கபிலர் பாடலைக் கேட்ட அரசன் வடமொழியில் வல்லவனாயிருந்ததனோடு, இசைப் பயிற்சியும் பெற்றவனாய் விளங்கியிருந்தான் என்பதாம்! ஒரு புலவன் தன் நாட்டினை விட்டு, வேற்றுநாட்டுக்குச் செல்லவேண்டிய காரணம் என்னவாக இருக்கும்? அவன் தன்னை அறிவு மிக்கவனாகக் ஆக்கிக்கொள்ளவே பிற நாடுகளுக்குச் செல்வான்! பிரகத்தன் ஆரிய அரசன் எனவும் கூறப்படு

வதால், அவன் இக்காரணம் பற்றியே தமிழ் நாட்டுக்கு வந்திருக்கவேண்டும் என்பது உறுதிப்படுகின்றது! நம் நாட்டுக்கு வந்தவன் நம் மொழியைக் கற்றுணர்ந்தான். இதன் சுவையைத் தெரிந்து மகிழ்ந்தான், இம்மொழியின் மாண்புகளை முற்றிலும் அறியவிரும்பிக் கபிலரை அணுகினான். அவரால் பெரிதும் பாராட்டப்பெற்றான்.

அக்காலத்தே வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் சிறந்த புலமையுடைய பலர் இருந்திருப்பர். வன்மீகியார், கோதமனார் என்று காணப்படும் பெயர்களும், பிரகத்தனைப்போல், நம் நாட்டுக்குவந்து நம்மொழியைப் பயின்று புலமை மிக்கவராய்த் திகழ்ந்த வடநாட்டுப் புலவரே போலும்! பிரகத்தன் தம்மைத் தமிழ் மொழியின் மாண்புகளைத் தெரிவிக்க வேண்டவும், கபிலர் பெருமகிழ்வுற்றார்! அவனுடைய ஆர்வத்தையும், புலமையையுங் கண்டு வியந்தார்! அவனுக்காக இக்குறிஞ்சிப் பாட்டைப் பாடியருளினார். இப்பாடலைப் பெற்றுப் பிரகத்தன் பெருமகிழ்ச்சியுற்றான். தன் ஆசிரியருக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் ஒரு சிறிய பாடலைப் பாடினான். அதுவே குறுந்தொகையின் 184-ம் பாடலாய் விளங்குகின்றது. அதனை அகத்திணையின் ஒரு துறையைப் புலப்படுத்துவதாக அமைத்திருப்பதனைக் கொண்டே, பிரகத்தனுடைய பெரும் புலமையை நாம் உய்த்துணர்ந்து கொள்ளலாம்!

அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை;
குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே!
இதற்கிஃது மாண்ட(து) என்ன(து) அதற்பட்டு
ஆண்டொழிந் தன்றே மாண்தகை நெஞ்சம்,
மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉம் கான லானே!

தன்னை மாணவனாக ஏற்றுக்கொண்டு கபிலர் குறிஞ்சிப் பாட்டினைப் பாடியருளியதற்காகப் பிரகத்தன் அவருக்குத்

தன் நன்றியைத் தெரிவிக்கப் பாடியதே இப்பாடல். இதனுல் கபிலர் தம் நோக்கத்தில் வெற்றிபெற்ருர் என்பதனையும், பிரகத்தன் அவரால் பெரும்பயன் பெற்ருன் என்பதனையும் நாம் உணர்ந்துகொள்ள முடிகின்றது. அவ்வரசனுடைய தமிழ்ப்புலமைக்கும் இப்பாடல் சிறந்த சான்ருய் அமைகின்றது,

கேட்போனுகிய பிரகத்தனுடைய பயிற்சி, புலமை, மனநிலை முதலியவற்றைக் கருதிக் கபிலர் தாம் இயற்றிய பாடலை அவன் மனத்தைக் குளிர்விக்கும் முறையில் பாடினுர் என்றும், தம் நோக்கம் நன்கு நிறைவேற அவர் நம் மரபில் சில மாறுதல்களை மேற்கொண்டார் என்றும், ஒரு புதிய நெறியை வகுத்தமைத்துக் கொண்டார் என்றும் கண்டோம் அல்லவா? இவ்வனைத்தையும் அவ்வாரிய அரசன் உணர்ந்து கொண்டதனை அவன் பாடல் அறிவிக்கின்றது! தமிழ் மொழி மரபின் மாட்சியைக் கபிலரால் உணர்ந்து கொண்டவன், அவருக்கு நன்றி தெரிவிக்கும் பொழுது, அவர் அறிவுறுத்தியனவற்றைத் தான் தெரிந்து கொண்டதனைப் புலப்படுத்தியிருக்கின்ருன்! இதுவே ஒரு மாணவன் தன் ஆசிரியருக்குச் செய்யக்கூடிய சிறந்த கைம்மாறு அன்ருே? தன்னுடைய நன்றியறிதலைப் பிரகத்தன் அகத்திணைத் துறையைத் தழுவிய பாடலாக அமைத்துப் பாடியிருப்பது இக்காரணம் பற்றியேயாம்! கபிலர் செய்திருப்பது போலவே, அவன் தான் எடுத்துக் கொண்ட துறைக்கு அயலானவற்றைப் புகுத்தித் தம் ஆசிரியரை மகிழ்வித்தான். இதனுல் அவன் தான் எவ்வகையிலும் கபிலருக்கு ஏற்ற மாணவனே என்பதனைப் புலப்படுத்திக் கொண்டிருக்கின்ருன்!

ஒரு தலைவன் ஒரு பெண்ணைக்கண்டு, தன்மனத்தைப் பறிகொடுத்துவிட்டுத் தவிக்கின்ருன்! அவனுடைய பாங்கன், அவன் நிலைக்குச் சற்றும் இரங்காதவனுய், உன்னுடைய அறிவுக்கும் ஒழுக்கத்துக்கும் ஏற்காத செயலைச் சற்றும் ஆராயாமல் செய்துவிட்டு இத்துன்பத்

ணைத் தேடிக்கொண்டாயே!' என்று கூறிக்கடிந்து கொள்ளுகின்ருன். அத்தலைவன் தன்னுடைய பாங்கனுக்கு அளித்த மறுமொழியாகப் பிரகத்தன் பாடல் அமைந்திருக்கின்றது. 'மயிற்பீலியின் கண்களை ஒத்த அழகுடைய தலைக்கோலத்தைக் கொண்டுள்ள பரதவப்பெண்ணின் கண்வலையில் அக்கானலிடத்துச் செல்வோர் தப்பாமல் படுவர், அவ்வழிச் சென்றதனுல் என் நெஞ்சம் அவள் வயத்ததாகிவிட்டது. ஆகவே அப்பெண் வாழும் குடியிருப்புக்குப் போகும்வழியில் ஒருவரும் செல்லவேண்டாம்! தம் நெஞ்சறிந்ததனைச் சான்ருேர் மாற்றிக் கூற மாட்டார்' என்பது அப்பாடலின் திரண்ட பொருள்.

குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்று தொகை நூல்களுள்ளும் ஒரு தலைவன் தன்னுடைய பாங்கனுக்குக் கூறியனவாக இருக்கும் பாடல்கள் இருபத்தி ஒன்றே! அவற்றினுள்ளுந் தன்னைக் கடிந்துகொண்ட பாங்கனுக்கு மறுமொழியாக அமைந்துள்ள பாடல்கள் செம்பாதியேயாம்! எனவே 1,200 பாடல்களுள், பத்துப் பாடல்கள் மட்டுமே அமைந்திருக்கும் ஒரு துறையில், பிரகத்தன் தன் பாடலைப் பாடியிருக்கின்ருன் என்பது புலனுகின்றது. இதனுல் புலவர் பலரும் சென்ற பெரு வழியைவிட்டு, பிரகத்தன் ஒரு சிலரே துணிந்து சென்ற சிறு நெறியைத் தனக்கு வழியாகக்கொண்டான் என்று தெளியலாம்! என்னே இவன் தேர்ச்சியும் புலமையும் இருந்த பெருமை!

ஆரிய அரசன் தன் பாடலுக்கு இத்துறையைத் தெரிந்தெடுத்துக் கொண்டதற்கு இரு தக்க காரணங்கள் இருக்கின்றன. பாங்கனுக்குக் கூறிய மறுமொழியாய் இயன்றுள்ள இருபத்தியொரு பாடல்களுள்ளும் கபிலர் பாடியிருப்பவை மூன்று. ஆகவே கபிலருக்கு இத்துறையில் பற்று உண்டு எனத் தெரிகின்றது. அவர் இயற்றியுள்ள பாடல் ஒன்றினில் (குறுந். 95) தலைவியின் சாயல் தலைவனுடைய உரனை வெற்றிகொண்டதாகக் கூறப்பட்

டிருக்கின்றது. பிரகத்தன் கபிலரை அடுத்ததனுல் பெற்ற பயனும் அத்தகையதே! எனவே தன் ஆசிரியரைப் பின்பற்றி, அவருக்குப் பெரிதும் பிடித்திருந்த ஒரு துறையையே தான் தெரிந்தெடுத்துக்கொண்டு, அவர் குறிப்பிட்டுள்ள பொருளைத் தழுவியே தன் பாடலையும் அவ்வரசன் அமைத்திருக்கின்ருன்! அவனுக்குத் தன் ஆசிரியரிடத்து இருந்த மதிப்பும் பற்றும் எத்தகையது!

தன்னுடைய பாடலைத் தொடங்கும் பொழுதோ அதன் முதல் அடியிலேயே, இவ்வரசன் சான்ருேரைப் பாராட்டிக் கூறியிருப்பதனை நாம் கருதிப் பார்க்கவேண்டும். இதனை நாம் கபிலரைக் குறிப்பிடும் குறி என்று எளிதிலும் உறுதியாகவும் தெரிந்துகொள்ளலாம். தம் முடைய பாடல்களில் இயன்ற இடங்களில் எல்லாம் சான்ருேரைச் சிறப்பித்துப் பாடுவதனைக் கடமையாகக் கருதியிருந்த கபிலரின் மாணவன், தானும் சான்ருேரைப் பாராட்டியபடி தன் பாடலைத் தொடங்கியிருப்பது வியப்புடையதாகுமோ? இம்முதலடி இப்பாட்டில் கூறப்படும் பொருளுக்கு இன்றியமையாது வேண்டுவதன்று. அதனை நீக்கிவிடினும் இப்பாடல் பொருள்வளம் சிறிதும் குன்ருமல் இயங்கும். இதனுல் பிரகத்தன் தன் பாடலின் தொடக்க அடியால் ஆசிரியனுக்கு வணக்கஞ் செலுத்தியிருக்கின்ருன் என்று துணியலாம்!

மூன்ரும் அடியில் வரும் 'இதற்கிது மாண்டது என்னுமல்' என்ற விவரம் இப்பாடலின் பொருளுக்குப் பயனளிப்பதன்று; இதனை அகத்திணைப் பாடலாகக் கொண்டால், அவ்வாராய்ச்சி விவரத்தைப் புறக்கணிப்பதால், பாடலின் சுவையோ, பொருளோ சிறிதும் குறைந்துவிடாது! எனினும், பிரகத்தன் இதனை முதலில் புகுத்தியிருப்பது ஏன்? அவ்வழிச் செல்லாதீர்கள் என்று காணப்படும் கட்டளை இத்துறையில் அமைந்துள்ள பாடல்களின் போக்குக்கு முற்றிலும் மாறுபட்டது! வழக்கமாகத் தலைவன் தன் பாங்கனைத் தன்னை மயக்கிய தலைவியைச்

சென்று கண்டு வருமாறு கூறுவான். அவள் இருக்கும் பொழில், இடம் முதலியவற்றின் அடையாளங்களையும் கூறிப் போகச்செய்வான். ஆனால் இப்பாடலில் அதற்கு மாறாகத் தலைவன் தன் பாங்கனைத் தலைவியின் குடியிருப்பு இருக்கும் சேரிக்குச் செல்லும் பாதையில்கூடக் காலை வைக்க வேண்டாம் என்று கட்டளையிடுகின்றானே! இது நம்மொழி மரபுக்கு நேர்மாறாக இருக்கின்றதே! பிரகத்தன் அறிந்து கொண்டிருந்தது இவ்வளவே தானோ? ஆனால் அவன் பாடலைச் சங்கச் செய்யுட்களோடு கோத்தவர் நம்மொழி மரபுகளைத் தெரியாதவரல்லரே! அவர்கள் இப்பாடலை வேண்டி ஏற்றுக் கொண்டிருக்கின்றனரே!

ஏழு அடிகளைக் கொண்ட சிறிய பாடலில், முதல் இரண்டு அடிகளும், மூன்றும் அடியின் முதற்பாதியும் இப்பாடல் அமைந்த துறைக்கு வேண்டுவனவல்ல. ஏன், மாறுபட்டவை எனக் கூறுவதும் ஏற்கும்! குறிஞ்சிப் பாட்டைக் கேட்கும் பேறுபெற்ற பெரும் புலவன், தான் பாடிய ஏழு அடிகளுள் மூன்றில் ஒரு பங்கைப் பொருத்தம் சிறிதும் இல்லாததாக அமைத்திருப்பானா? அவன் பாடலைக் குறுந்தொகையுள் கோத்தவர் தாம் அறியாதவரா? எனவே இப்பாட்டின் நோக்கமும் பொருளும், கழறிய பாங்கனுக்குத் தலைவன் கூறியதாகாது, வேறொன்றாக இருத்தல் வேண்டும் என்று தெளிவாகப் புலனாகின்றது!

குறுந்தொகைப் பாடல்களுள் வெள்ளிவீதியார் என்ற நல்லிசைப் புலவர் பாடிய பாடல்கள் சில காணப்படுகின்றன. அவர்தம் காதலனை எண்ணி ஏங்கிக் கூறிய பாடல்களும், அவனைத் தேடித்திரிந்து புலம்பிக் கூறிய பாடலும் குறுந்தொகையில் காணப்படுகின்றன. இவை வெள்ளிவீதியாரின் வாழ்க்கையைக் குறிப்பிடும் சரித்திரத் தொடர்புடைய பாடல்களேனும், அகத்திணை ஒழுக்கத்தின் பொதுப் பண்புகளைப் புலப்படுத்துகின்றனவாகையால், இவற்றையும் புலவர் குறுந்தொகையுள் சேர்த்துக் கொண்டனர். இவைகளைப் போலவே பிரகத்தன் தன்

ஆசிரியனுக்கு நன்றி தெரிவிக்கப் பாடிய பாடலினையும், அதன் சிறப்பு நோக்கி, அது அகத்திணைப் பாடலாகக் கருதப் பெறும் பண்பினையும் உடையதாதல் பற்றிக் குறுந் தொகையுள் சேர்த்துக் கொண்டனர்.

ஆரிய அரசன் தன் ஆசிரியருக்குத் தெரிவித்த நன்றி யறிதலை ஏன் புறப்பாட்டாகப் பாடியிருந்திருக்கக் கூடாது? அகத்திணைப் பாடலாக அதனை அவன் அமைக்கக் காரணம் என்ன? புறத்திணைப் பாடல் ஒன்றாக அவ் வரசன் தன் நன்றியறிதலைத் தெரிவித்திருந்தானெனின் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டு பயனற்றதாகிவிட்டிருக் கும்! அவர் பாடியதனைத்தான் முற்ற வுணர்ந்துகொண் டதனைத் தெரிவிக்க அவன் அகத்திணைப் பாடலாகப் பாடி யதே பொருத்த முடையதாம்! ஒரு நல்லாசிரியனுக்கு— பொருளை விரும்பாதிருந்த கபிலருக்கு—அவர் மாணவன் எத்தகைய கைமாறு செய்யக்கூடும்? அவர் அறிவுறுத் தியவற்றை ஐயமின்றி அறிந்து கொண்டமையை அவர் அறியச் செய்வதே அவன் கடமையன்றோ? அதனையே அவ்வரசன் நன்கு செய்திருக்கின்றான்? பேராசிரியருக் கேற்ற நன் மாணாக்கனாக இருந்திருக்கிறான். இவ்வாசிரியர் செய்த தவப்பயன்தான் எத்தகையது!

அகப்பாடல் ஒன்றினை ஆசிரியனிடமிருந்து பெற்ற வன், தன் நன்றியறிதலையும் அகப்பாடல் ஒன்றினால் தெரி விப்பதுதான் பொருத்தமுடையது! அதனையும் அவர் விரும்பிக் கையாண்ட துறையொன்றினைச் சேர்ந்ததாக, அவர் கருத்தைத் தழுவி, அவருடைய கோட்பாடுகளுக்கு ஒப்ப அமைத்திருப்பது அவனுடைய குண நலத்தையும், அவனுக்கு ஆசிரியனிடத்திருந்த அளவற்ற அன்பையும் புலப்படுத்துகின்றன. இவை உண்மையே எனின் அவ் வரசன் கபிலர் பெரிதும் விரும்பிப் பாடிய குறிஞ்சித் திணையை விடுத்து நெய்தல் திணையில் தன்பாடலை அமைத் திருப்பானா? தலைவன் பாங்கனுக்குக் கூறியதாக அமைந்த

இருபத்தியொரு பாடல்களுள் பதினெட்டு குறிஞ்சித் திணையைச் சேர்ந்தவை. இவன் பாடலும் இன்னும் இரண்டுமே நெய்தலைச் சேர்ந்தவை !

ஆரிய அரசன் என்ற அடைமொழிகளைக் கொண்டே அவன் நம் நாட்டுக்கு வந்த பின்னரே கடலைக் கண்டவனாய் இருந்திருக்கக் கூடும் என்று தெரிந்துகொள்ளலாமன்றோ ? தமிழ் நாட்டுக்கு வந்தவன் இரு பயன்களைப் பெற்றான். கடலின் பரப்பைத் தன் கண்ணாரக் கண்டான் ; தமிழ்க் கடலின் ஆழத்தைக் கபிலரால் அறிவுறுத்தப் பெற்றுத் தெரிந்து கொண்டான் ! எனவே தான் புதிதாகக் கண்டதனை வியந்து அவன் தன்பாடலை நெய்தல் திணையைச் சேர்ந்ததாகப் பாடியிருக்கின்றான் ! எனினும் தன் ஆசிரியர் குறிஞ்சி பாடிய பெரும்புலவர் என்பதனையும், தான் பெற்றது குறிஞ்சிப் பாடல் என்பதனையும் அவன் குறிப்பிடாமல் இல்லை ! தன் பாடலின் உரிப் பொருளைக் குறிஞ்சித்திணையைச் சேர்ந்ததொன்றாகவே தெரிந்துகொண்டான். இம்மட்டோ ?

அவனை ஆட்கொண்ட தமிழ்க்கன்னி பரதவர் மகளேயெனினும், மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவையாக வல்லவோ தோற்றமளிக்கின்றாள் ! பெயரளவில் நெய்தல் திணைப்பாட்டலே யல்லாமல், அது பொருளளவில் குறிஞ்சிப் பாடலாகவே இருக்கக் காண்கின்றோம் ! இவன் இங்குக் கையாண்டுள்ள உவமமும் ஆசிரியர் கபிலர் கூறியிருப்பதுவேயாம் !

'மென்சீர்க் கலிமயில் கலாவத்தன்னவிவள் ஒலிமென் கூந்தல்' (குறுந் : 225) என்பது கபிலர் இயற்றிய பாடலின் பகுதி !

இப்பாட்டின் தலைவனை ஆரிய அரசனாகவும், பாங்கனை அவனை ஒத்த வடமொழிப் புலவராகவும், நுண்வலைப் பரதவனைக் கபிலராகவும், மாண்முடிப் பாவையைத் தமிழ்க் கன்னியாகவும் கருதிப் பொருள் கொள்ளும் பொழுது

இது ஆரிய அரசன் தன் ஆசிரியருக்குத் தெரிவித்த நன்றி யறிதலே என்பது புலப்படும்! இவ்வாறு பொருள் கொள்ளுவதற்கு 'இதற்கிது மாண்டது' என்ற ஆராய்ச்சி இன்றியமையாது வேண்டும்! கபிலரைச்சேர்ந்து தமிழ் மொழி மாண்பினை உணர்ந்து கொண்டவன்; 'தமிழ் சிறந்ததா? வடமொழி உயர்ந்ததா?' என்று ஆராய்ந்து கொண்டிராமல், தமிழ் நூற்கடலில் மூழ்கி மகிழ்ந்ததனைத் தெரிவித்திருக்கின்றான். இப் பயனற்ற ஆராய்ச்சியில் அவன் ஈடுபட்டிருந்திருப்பானே யாயின், தமிழையும் தெரிந்துகொண்டிருக்க மாட்டான், தன் வடமொழிப் புலமைக்கும் மாசு கற்பித்துக் கொண்டிருப்பான்!

இத்தகைய வீண் ஆராய்ச்சியில் தான் இறங்கிப் பாழாகிவிடாமல் இருந்ததனோடு, தன்னை ஒத்த பிறரையும் இறங்க வேண்டாம் என்று எச்சரிக்கை செய்பவன் எத் துணைப் பெரும் புலவனாய் இருக்கவேண்டும்? அவன் எத் தகைய விரிந்த மனப்பான்மை கொண்டவன்? 'குறுகல் ஓம்புமின்' என்று அவன் மரபு பிறழக் கூறியிருப்பது, அவன் நோக்கம் கபிலருக்கு நன்றி செலுத்துவதும், பிற ருக்குத் தான் பெற்ற பயனைத் தெரிவிப்பதுமேயாம் என்ப தனைப் புலப்படுத்துகின்றது. இப்பொழுது இப்பாடல் அனைத்தும்—முதல் மூன்றடிகளுங்கூடப் பொருளுடையன வாய்த் தோன்றுகின்றன? அகப் பாட்டுக்கு வேண்டி யிராத அடிகளும் இவ்வாறு புறப்பாடலாகக் கருதிப் பொருள் கொள்ள இன்றியமையாது வேண்டும்! எனவே, அவ்வரசன் பாடியது அகத்திணையைச் சார்ந்திருக்க அமைந்ததே யெனினும், புறப்பாடலேயாம்!

ஆரிய அரசன் பாடிய பாடல்அமைதியும், பொருளும் உடையதாய் விளங்குகின்றது! எனினும் அதனைக் குறுந்தொகையுள் கோத்தது எப்படிப் பொருந்தும்? அது பொருந்தும் என்று கருதியே அதனைப் புலவர் சேர்த்துக் கொண்டிருக்கின்றனரன்றோ? பிரகத்தனுடைய புலமை யின் பெருமையை, குறுந்தொகையைக் கோத்த புலவரால்

நாம் நன்கு தெரிந்துகொள்ள முடிகின்றது. "இதற்கிது மாண்டது' என்ற ஆராய்ச்சி அகத்துக்கும் துணை செய்யும் முறையிலேயே அமைந்திருக்கின்றது. தன் அறிவினைப் பழித்து இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் 'நான் என் அறிவு உயர்ந்ததா, தலைவியின் கண் சிறந்ததா என்று ஆராயாமல் அதன் பிடிக்குள்பட்டேன்.!' என்று கூறுகின்றான். இவ்விவரம் காணப்படாவிடின், நாம் பாங்கனைப்போல் தலைவனை அறிவிழந்தவனாகவே கொள்ள வேண்டி வந்திருக்கும்!

தலைவன் அறிவுமிக்கவனே! தான் குறிப்பிட்டபடி ஆராய்ச்சி செய்ய முற்பட்டிருந்தால், அவன் அவளை அடைந்திருக்கமுடியுமா? நீரில் மூழ்கி விளையாடும் விருப்பத்தை மேற்கொண்டவன், தன்மூச்சை அடக்கிக் கொண்டு மூழ்கித் திளைக்கலாம். நீரில் அமிழ்ந்திருக்கும் வரை மூச்சை அடக்கிக்கொண்டிருக்க வேண்டும்! அதன் பின் அடக்கவேண்டுவதில்லை! அவ்வாறே அவளைத் துய்க்கும்பொழுது அறிவு இருப்பதனைக் காட்டிக்கொள்ள வேண்டிய தேவைஇல்லை! பின்னர் அறிவு இருப்பதனை மறைக்க வேண்டாமே! அவள் இல்லாதிருக்கும்பொழுதும் அவள் நினைவு தோன்றுகின்றதே எனின், அதுஅறிவின்மை யாகாது. நீரில் மூழ்கி விளையாடவேண்டும் என்ற விருப்பம், வீட்டில் இருக்கும்பொழுது எழுவது தவறாகுமா?

'குறுகல் ஓம்புமின்' என்றது 'போகாதே' எனத் தடுத்ததாகாது! புறப்பொருளிலும், பிரகத்தன் பிற வட மொழிப் புலவரையும் தன்னைப்போல் தமிழைப் பயின்று பயனடையுமாறு தூண்டுகின்றான்! எனினும் பயனற்ற ஆராய்ச்சி செய்யும் மனப்பான்மையை விட விருப்ப மில்லையெனின் நீங்கள் என் கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டாம் என்றே சொல்லுகின்றான்! இது எதிர்மறை உருவத்தில் அமைந்திருப்பதேனும், உண்மையில், தமிழ்ப் பயிற்சிபெறத் தூண்டும் விருப்பத்தை விளைவிப்பதே!

அவ்வாறே தலைவனும், 'நீ கூறுவதுபோல் நான் அறிவிழந் தவன், அல்லேன்; நீயும் அங்கு சென்று அறிந்துவா! ஆனால் அவளைக் காண்பதனால் உன் அறிவு அகன்று விடும் எனக் கருதின், 'போகவேண்டாம்' என்றே கூறுகின்றான். இது என்னைப் போலவே நீயும் அறி விழக்காமலேயே அவளைக் காணலாம்' என்று கூறியதற்கு ஒப்பேயாம்! இதனை வலியுறுத்தவே, தன்னைச் சான்றோ ருக்கு ஒத்தவனாகக் காட்டிக்கொண்டு, 'என் நெஞ்சறிந்த தனை மறைத்துக் கூறமாட்டேன்' என்றான்.

கபிலரை நுண்வலைப் பரதவராகக் கருதிக் கூறியது எத்துணைப் பொருத்தமானது! நுண்கலைகளைக் கற்றுத் துறை போகிய அப் பெரியார், அவற்றின் வாயிலாகவே பிற அறிஞருக்குப் பெரு மகிழ்ச்சி யளிக்கின்றார்! பரதவர் தம் வலையால் பிடித்த மீன்களைத் தாமே யுண்ணாமல், பிறருக்கும் அளித்தலைப்போலவே, இவரும் தன் நுண் மாண் நுழைபுலத்தால் கண்டவற்றைப் பிறரும் அறிந்து துய்க்க வைக்கின்றார்! பரதவன் துணிவுடன், சிறிதும் அஞ்சாமல் கடலிற் செல்லுதலைப்போலவே, இவரும் நூற் கடலுள் தயக்கம் இல்லாமல்செல்லும் தகுதியும் உரனும் உடையவர்! இல்லையேல், தம் பாடலுக்குப் புதிய வழி வகுத்துக் கொண்டதனோடு, அதனை இளங்கோவடிகள் உணர்ந்துகொண்டு, தம் படைப்பை அதனைப்போல் விளங்கும்படிச் செய்ய முற்படத்தூண்டும் முறையில் விளக்கி யிருக்கக் கூடுமா?

# 4. தோற்றுவாய்

குறிஞ்சிப் பாட்டைக் கபிலர் ஆரிய அரசன் யாழ்ப் பிரகத்தன் கேட்டு மகிழவும், தமிழ் மொழி மரபின் மாண்பினை அவன் அறிந்துகொண்டு வியக்கவும் பாடியருளினார். பிரகத்தன் வடமொழிப் புலவனாகையாலும், அவன் கதைகளை உள்ளிட்ட பெருங் காப்பியங்களையும், புராணங்களையும் பயின்று சுவைத்தவனாகையாலும், அவன் உள்ளத்தை நிறைவிக்க ஆசிரியர் தாமும் ஒரு கதையை உள்ளிட்டதாக அமையும்படித் தம் பாடலை இயற்றி இருக்கின்றார். அகப் பாடல்கள் அனைத்தும் மக்கள் வாழ்க்கையை விவரிக்கும் சித்திரங்களேயாம்! எனினும் அவற்றுள் ஒவ்வொன்றும் வாழ்க்கையின் ஒரு நிகழ்ச்சியை மட்டுமே புனைந்துரைக்கும்.

பல நிகழ்ச்சிகளைக் கோவைபடுத்தி, காரண காரியத் தொடர்பு சிறந்து விளங்கும்படி விவரிப்பது கதையின் இலக்கணம். சங்கப் பாடல்கள் இத்தகைய நோக்கம் உடையனவல்ல. கபிலரே முதன் முறையாக இவ்வமைப்பு முறையைக்கொண்ட ஒரு பாட்டை இயற்றியுள்ளார். எனவே இதன் தோற்றத்துக்கும் அமைப்பு முறைக்கும் பிரகத்தனே பொறுப்பாளியாவான்! அவனை மகிழ்விக்கப் புதியமுறையில் கபிலரால் இயற்றப்பெற்ற குறிஞ்சிப் பாட்டு, இளங்கோவடிகளின் மனத்தை முற்றிலும் கவர்ந்து அவரையும் ஒரு பெருங்காப்பியமாய்த் தம் நூலை அமைக்கத் தூண்டியிருக்கின்றது. இதனால் பிரகத்தன் செய்திருக்கும் பெரும்பணியின் அளவை நம்மால் உணர்ந்துகொள்ள முடிகின்றது!

கபிலர் பிரகத்தனுக்கு அறிவுறுத்த விரும்பியது தமிழ் மொழி மரபுக்கே சிறப்புடையதாய்க் காணப்படும் களவொழுக்கமாகும்! இது இயற்கைப் புணர்ச்சியில் தொடங்குவது. ஒருவர் உதவியுமில்லாமல், ஒரு தலைவனும் தலைவியும் தாமே எதிர்பட்டுக் கண்டு, அதனுல் இருவரும் ஒருவரிடம் மற்றவர் மாற்ற முடியாத அன்பு கொண்டவராய் ஆகிவிடுவது இயற்கைப் புணர்ச்சி என்று கூறப்படும். இவ்விருவரிடத்தும் தோன்றிய அன்பின் வளர்ச்சியைக் குறிப்பிடுவனவே களவொழுக்கத் துறைகள்.

பற்றுக் கொண்ட உள்ளத்தவராகி விட்ட காதலர் இருவரும், தம்மை அன்பால் பிணைத்தவரைக் காண, முதல் நாளைப் போலவே, இரண்டாம் நாளும் தாம் ஒருவரை ஒருவர் சந்தித்த இடத்திற்குச் செல்வர். இவ்விரண்டாம் கட்டத்தினை இடந்தலைப் பாடு எனக் கூறுவர். இவை நிகழ்ந்த பின், இருவரும் இவ்வாறே பிறருக்குத் தெரியாமல் நாள் தோறும் தனித்துக் கண்டு மகிழ விரும்பினுர்கள் எனின், தம்முடைய நோக்கம் நன்கு நிறைவேறத் தம்முடைய தோழர்களின் துணையைப் பயன்படுத்திக் கொள்ளுவர். இவ்வாறு தோழர்களின் துணையால் இருவரும் கண்டு மகிழ்வதனைப் பாங்கர்க் கூட்டம் என்று கூறுவர். பிறருக்கு இவர்கள் உறவு வெளிப்படும் வரை, இம் மறைந்த ஒழுக்கம் நிகழும். அதன் பின்னர்த் திருமணம் செய்து கொண்டு இவர்கள் இல்லறம் நடத்துவர்.

இளங் காதலர் பெரிதும் விரும்பிக் கைக் கொள்ளும் களவொழுக்கத்துக்கு இடையூறுகள் பல ஏற்படும். அவற்றுள் அயலார் தலைவியை மணம் பேச வருவது ஒன்ருகும். இத்தகைய இடையூறு ஏற்பட்டதனைக் கண்ட தோழி, தலைவி தானே விரும்பி ஒரு காதலனைத் தேடிக் கொண்டு விட்டாள் என்ற உண்மையை வெளிப் படுத்தியதனை இப்பாடல் விவரிக்கின்றது. இதனை அறத்

தோடு நிற்றல் என்று கூறுவர். உண்மையைத் தெரிந்து கொள்ளும் செவிலி, அதனைத் தாய் தந்தையருக்கும், சுற்றத்தாருக்கும் உணர்த்தி, மணம் பேச வந்த அயலாரை வெளியேற்றி விடுவாள். அதன் பின், தலைவனுடைய சுற்றத்தார் இவளை மணம் பேச வருவர்; தம் மகளின் மன நிலையை உணர்ந்திருக்கும் பெற்றோர் ஏற்றுக் கொள்ளவும் திருமணம் நிகழும். மணத்திற்குப் பிறகு நடை பெறும் வாழ்க்கையைக் கற்பொழுக்கம் என்று கூறுவர். இது எல்லா நாடுகளிலும் நிகழும் பொது வாழ்க்கையாகையால் இதனை விவரிப்பதில் பயனில்லை. எனவே இது நிகழக் காரணமாய் அமைவதும் தனிச் சிறப்புடையதுமாகிய களவொழுக்கத்தை விவரிக்கக் கபிலர் முற்பட்டார்.

முதல் இரண்டு நாட்களில் பிறர் எவரும் அறியாமல் தனித்துக் காண்பது இன்பம் பயக்கும் பண்பு சிறந்தது என்றுணரும் காதலர், இவ்வாறு தொடர்ந்து கண்டு மகிழ்ந்திருக்க விரும்புவது இயல்பேயாம்! இவ்வொழுக்கம் இடையறுமலும், பிறருக்குப் புலப்படாமலும் நிகழ இவர்களுக்குத் தோழியின் துணை இன்றியமையாததாக இருக்கும்! எனவே, அவளைத் தம் விருப்பத்துக்கு இணங்க வைக்க வேண்டும்! அதனை யார் செய்வது? தலைவி தன் ஒழுக்கத்தை வெளியிடக் கூசுவாள். எனவே தலைவனே தனக்கும் தலைவிக்கும் ஏற்பட்டு விட்ட தொடர்பைத் தோழிக்குப் புலப்படுத்துவான். இவ்வாறு செய்வதனை **மதியுடம் படுத்தல்** என்று கூறுவர். இது தோழி தலைவியின் மெய் வேறுபாட்டினைக் கண்டும், ஓராடவன் தன்னைக் கண்டு தனக்குப் பரிசில்கள் தருவதனைக் கொண்டும் இவர்கள் தொடர்பை ஒருவாறு புலப்படுத்திக் கொள்ளுவாள்! எனினும், அவளும் தலைவியும் உடனிருக்கும் பொழுது அவன் வருவதனால் வெளிப்படுவதனையே உறுதியாக ஏற்றுக் கொள்ளுவாள்.

இப்பாடல், தலைவியும் தோழியும் உடன் இருந்த காலத்தில் தலைவன் வந்ததனை, முதல் நிகழ்ச்சியாகக் கொண்டு நடக்கின்றது. ஆகவே களவொழுக்கத் துறைகளுள் இது மதியுடம்படுத்தலில் தொடங்கு கின்றது. இதற்கு முன்னர் நிகழ்ந்திருக்க வேண்டிய இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப் பாடு என்ற இரண் டினையும் ஒருவரும் விவரிக்க இயலாது. ஏனெனில் அவை நிகழ்ந்திருக்க வேண்டும் என்று பிறர் உய்த்துணர்ந்து கொள்ளலாமே யல்லாமல், அவற்றின் நிகழ்வைக் காண முடியாது. முதற் காட்சியையும், இடந்தலைப் பாட்டினை யும் விவரிக்கும் செய்யுட்கள் அனைத்தும் முற்றிலும் கற்பனை நிலைக்களனைக் கொண்டவையேயாம். மதி யுடம் படுத்தலில் தொடங்கி, தோழி விவரிப்பனவற்றைக் கற்பனையோடு உண்மைக் கலப்பும் உடையனவாகக் கொள்ளலாம்! ஏனெனில் இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் தோழிக்குத் தெரிந்து நிகழ்ந்தவை !

ஒருவருக்கும் தெரிந்திருக்க முடியாத கற்பனை நிகழ்ச் சிகளை விவரிப்பதனை விலக்கியிருக்கும் ஆசிரியர், தோழி கூறியன அனைத்தும் உண்மையேயாம் எனத் தோன்றும் படிச்செய்துவிட்டிருக்கின்றார். எனினும் தம் கதையின் தொடக்கத்துக்கு முன்னர் நிகழ்ந்திருக்க வேண்டியவை, நிகழ்ந்து முடிந்தன என்று நாம் உய்த்துணர்ந்து கொள்ள வும் வைத்திருக்கின்றார். தன் எதிரில் தலைவன், தலைவி யின் 'மாசறு சுடர் நுதலை' நீவியதாகத் தோழி கூறியிருப் பதனைக் கொண்டே, நாமும், அவளும் இவர்கள் இருவரும் இதற்கு முன்னர் ஒருவரையொருவர் கண்டு அறிமுகப் படுத்திக்கொண்ட காதலரே என்பதனைப் புலப்படுத்திக் கொள்ளலாம். இதுவரை 'தம்முளே புணர்ந்ததாமறி புணர்ச்சியராய்' இருந்தவர் இருவரும், இப்பொழுது தாமே விரும்பித் தம் தொடர்பைத் தோழிக்கு வெளிப்படுத்து கின்றனர். அதனைத் தோழிகூற நாமும் தெரிந்துகொள்ளு கின்றோம்!

தலைவியோடு செய்து கொண்டிருந்த முன்னேற்பாட்டிற்கு ஒப்பவே தலைவன் அவர்கள் இருவரும் உடன் இருக்கும் காலத்தில் வந்தான். இல்லையேல், இவர்கள் அவனைக் காண்பதற்கு முன், அவனுடைய நாய்கள் வந்து வளைத்துக்கொள்ளக் காரணம் என்ன? அவன் ஆணையை மேற்கொண்டே அவை அவ்வாறு செய்தன என்பது உறுதி! எவ்வாடவனும், தான் முன்புப்பழகி யறியாத வரைத் தெரிந்துகொண்டு பழக இத்தகைய சூழ்ச்சியைச் செய்து அதனை நிறைவேற்ற முன்வரமாட்டான்! எனவே தோழி செவிலியை ஏய்க்கத் தான்கூறும் முறையிலேயே இவர்கள் இருவருக்கும் தொடர்பு ஏற்பட்டது எனக் கூறுகின்றாளேயெனினும், உண்மையில் கதை தொடங்குவதற்கு முன்னரேயே இக்காதலர் இருவரும் ஒருவரையொருவர் கண்டு அன்பு கொண்டவர்களாகிவிட்டிருந்தனர் என்பது தேற்றம்!

நாய்களைக் கொண்டு தன் நோக்கத்தை—தோழிக்குத் தம் தொடர்பைப் புலப்படுத்துவதனை—நிறைவேற்றிக் கொள்ள விரும்பியவனுக்கு யானையின் வருகை எதிர் பாராத விதத்தில் நல்ல உதவியளித்தது. அதனுடைய வருகை அவனுக்கு மட்டுமேயல்லாமல் தோழிக்கும் உற்ற துணையாய் உதவுகின்றது. யானையின் வருகையே தலைவிக்கும் தலைவனுக்கும் ஒரு தொடர்பினை ஏற்படுத்தக் காரணமாய் இருந்தது என்று அவளால் செவிலியும், நாமும் நம்பும் முறையில் விவரிக்க முடிந்திருக்கின்றதன்றோ? இதனால் தோழி தன் கற்பனைத் திறத்தைப் பயன்படுத்தாமல், தான் நேரில் கண்டவற்றை விவரித்தே, செவிலியும், நாமும் மனமுவந்து ஏற்றுக்கொள்ளும் ஒரு கதையைக் கூறுகின்றாள் என்று நாம் கருதிக்கொள்ளுகின்றோம்! இத்தகைய எண்ணத்தைத் தோற்றுவிப்பது கதையின் இன்றியமையாத இலக்கணம் ஆகும்!

இப்பாடலின் முதல் முப்பத்திநான்கு அடிகள் இதனுள் பொதிந்து கிடக்கும் கதைக்குச் சிறந்த முன்னுரை

யாக அமைந்திருக்கின்றன. இப்பகுதியில் இக்கதையில் பங்குபெறும் நால்வருள் மூவரை நமக்கு ஆசிரியர் அறிமுகப்படுத்திவிடுகின்ருர். உடன், இவர்களுடைய நிலை நோக்கம், இயல்பு முதலியவற்றையும் புலப்படுத்தியிருக்கின்ருர்! 'நீயும் புலம்புதி; இவளும் தேம்பும்; யானும் ஆற்றலேன்' இம்மூவருடைய நிலையும் துன்பம் தோய்ந்தது. தோழி கூறுவனவற்றைச் செவிலியைக் கேட்கத் தூண்டுவது இதுவே. தோழி கதைகூற முற்பட்டதற்கும் இதுவே காரணமாய் அமைகின்றது; நம்மை இப்பாடலை முற்றிலும் பயிலவைப்பதும் இதுவேயாம்! கபிலர் தாம்கூற வந்த கதையைத் தொடங்குவதற்கு முன்னரேயே, அதன் முன்னுரைப் பகுதியிலேயே அக் கதையில் பங்குபெறும் பாத்திரங்களை நமக்கு அறிமுகப்படுத்தி, அவர்களிடத்து நம்மைப்பெரிதும்பற்றுக்கொள்ளும்படிச் செய்துவிட்டிருக்கின்ருர்! இவருடைய திறனை நாம் உணர்ந்துகொண்டு வியக்கலாமே யல்லாமல், இத்தகையது என்று அறுதியிட்டு விவரித்தல் இயலாததொன்று!

வாழ்க்கையை இன்பமுடையதாக இருக்கச் செய்ய வேண்டும் என்ற விருப்பம் எல்லோருக்கும் உண்டு. இவ் விருப்பமே மக்களைச் செயலாற்ற வைக்கின்றது. இவ் வாறு இன்பத்தை விரும்பி ஏங்குபவர்களாகக் காணப்படினும், மக்கள் இன்பத்தைத் துய்த்து மகிழும் மனப்பாங்குடையவர்களாக இல்லை. என்றும் தாம் அடையாத இன்பத்தை அடைய ஏங்குபவராகவே காலத்தைக்கடத்தி விடுகின்றனர்! இவர்கள் இன்பம் எனக் கருதுவது துன்பத்தினின்றும் விடுபட்டிருக்கின்ற நிலையையேயாம். எனவே மக்கள் மனத்தை மிகவும் பற்றிக்கொண்டு அவர்களை அன்புடையவராகவும், அமைதிகாண முற்படுபவராகவும் செய்வது இன்பம் இல்லாத நிலையே! இதனை நன்குணர்ந்தவராய் இருந்தமையால் கபிலர் தம் கதையைக் கூறத் தொடங்குமுன் அதன்கண் பங்கு பெறுபவர் மூவ

ரும் இன்பத்தை இழந்த நிலையையுடையவராக—துன்பத்தில் நலிபவராக—அறிமுகப்படுத்தியிருக்கின்ருர்.

தலைவி, செவிலி, தோழி என்ற இம்மூவரின் நிலையும் மிக இரங்கத்தக்கதாய் இருக்கக் காண்கின்ருேம். இவர்களுடைய நிலை நம் மனத்தை இறுகப் பற்றிக்கொள்ளுகின்றது. நாம் இவரிடத்துப் பெரும் பற்றுக் கொண்டவராக மாறிவிடுகின்ருேம்! இவர்கள் நிலை மாறவேண்டுமே யென்று நாம் விரும்பத் தலைப்பட்டுவிடுகின்ருேம்! இவ்விருப்பமே நம்மை இப்பாடலைத் தொடர்ந்து படிக்க வைக்கின்றது! இப்பொழுது ஆசிரியருக்காகவோ, அல்லது கதைப் பாத்திரங்களுக்காகவோ நாம் இப்பாடலைத் தொடர்ந்து படிக்கமுன்வரவில்லை. நமக்காக, நம் மனத்தை நிறைவுடையதாக மாற்றிக்கொள்ளவே இதனை முற்றிலும் படிக்க முற்படுகின்ருேம்! எனவே இதன் போக்கு நமக்குச் சுவையூட்டும் என்று வேறு எவரும் நமக்குக் கூற வேண்டாமன்ருே?

இன்பம் மலிந்த வாழ்க்கையின் சித்திரம் நம்மைப் பற்ருது; மகிழ்விக்கவும் செய்யாது அதனை அறியுங் காலத்தில், 'வாழ்க்கை இவ்வளவு எளிதா?' என்ற எண்ணம் நமக்கு எழும்; இதுவே அச் சித்திரத்தைச் சுவையற்றதாகச் செய்துவிடும். ஆனல் இன்பம் இல்லாத வாழ்க்கையின் சித்திரம் நமக்கு இரக்க உணர்ச்சியையூட்டி நம்மைக் கவரும்; இன்பத்தையடைய முயலும் வாழ்க்கையின் சித்திரம் நம்மைப் பிணைக்கும். முயல்பவர் வெற்றி பெற வேண்டும் என்ற விருப்பம் நமக்கு எழும். நாம் அவர்கள் செயல்களைக் கூர்ந்து கவனிக்க முற்படுவோம். மேலும் இன்பமடைந்த பின் அதனுடைய சுவை குன்றி விடுகின்றது. அதனையடைய முயன்ற காலத்தில் நாம் எண்ணிக் கொண்டிருந்த அளவுக்கு அது இன்பம் பயப்பதில்லை. இதனலேயே இன்பத்தைப் பெற்ற பின்னரும் ஏக்கம் நீங்குவதில்லை. எனவே இலக்கியச் சித்திரங்களுள் துன்பம் பயப்பனவாகவும், அதனை மாற்ற முற்படுபவர்

செயல்களாகவும் தீட்டப்பெறும் அவலச் சுவைச் சித்திரங்களே படிப்பவரை மகிழ்வுறுத்திப் பற்றுக்கொள்ளவைக்கும் திறனுடையனவாக இருக்கக் காண்கின்றோம்!

இவ்வுண்மையை உணர்ந்தே பெரும் புலவர் அனைவரும் துன்ப இயல் கொண்டவையாகத் தம்சிறந்த படைப்புக்களை அமைத்திருக்கின்றனர். அவற்றுள்ளும் இயற்கையால் விளையும் துன்ப நிலையைக் காட்டிலும், இன்பத்தையடைய முற்பட்டுத் துன்பத்தைத் தேடிக்கொள்ளுபவர் வாழ்க்கையை விவரிக்கும் சித்திரங்களே நம்மைப் பரிவுகொள்ளச் செய்யும் பண்பு சிறந்தனவாம்! ஏனெனில், அவை நமக்குச் சிறந்த வழிகாட்டிகளாய் அமையும் வல்லமையுடையன! மக்கள் என்ன தவறு செய்து தாம் பெற முயலும் இன்பத்தைப் பெறாது, துன்பமுற்று அல்லற் படுகின்றனர் என்பதனைக் காண்பதால், நாம் அத்தகைய தவறுகளைச் செய்யாது நம்மைக் காத்துக்கொள்ளலாமல்லவா? இதனால் துன்பத்தை நம்மைப் பற்றவிடாமற் செய்துகொள்ளும் வல்லமை நமக்கு ஏற்படும்! இக்காரணம் பற்றியே அவலச் சுவையைப் பயக்கும் இலக்கியப் படைப்புகள் நம்மனத்தை முற்றிலும் கவர்ந்துகொள்ளுகின்றன.

இப்பாட்டின் தலைவி தனக்கு விருப்பமான தலைவனைப் பெற்றதனால் பெருமகிழ்ச்சி எய்தினாள். இனித் தன் வாழ்நாள் முழுவதும், இம்முதல்நாளைப் போலவே, இன்பம் மலிந்ததாய் இருக்கும் என்று அவள் எண்ணினாள்! இவ்வாறு இன்பம் நிறைந்ததாய்ப் பிற நாட்களையும் கழிக்க வேண்டும் என்றே அவள் களவொழுக்கத்தை மேற்கொள்ள ஒப்பினாள். அதனுடைய விளைவு என்னாயிற்று? அவள் மேனியும், வளையும் நிலை தளர்ந்தன; அவளுடைய கவின் தொலைந்தது; தனிமைத் துன்பம் அவளைப் பற்றிகொண்டது. பிறர் ஒருவரும் அறியாமல் இருப்பதுவே இன்பம் பயக்கும் என்று எண்ணியவள், இப்பொழு எல்லோரும் அறிய அவனைச் சேர்ந்திருக்கும் நிலை

விரும்புகின்ருள்! அவள் தானே துன்பத்தைத் தேடிக் கொண்டதனேடு நில்லாமல், செவிலியையும் துன்பப்பட வைத்துவிட்டாள்; தோழியையும் ஆற்றல் இல்லாதவளாகச் செய்துவிட்டாள்! தனக்கு நன்மையைச் செய்யக் கூடிய இருவரை இவ்வாறு செயலற்றவராகச்செய்துவிட்ட தலைவி, இனி இன்பத்தை எய்தக் கூடுமா? எய்தினளா? இக்கேள்விகளுக்கு மறுமொழி யளிப்பதே இப்பாட்லின் நோக்கம்!

இவ்வாறு நம் மனத்தைக் கவரும் முறையில் தம் பாத்திரங்களின் நிலையைத் தெரிவித்திருப்பதனேடு ஆசிரியர் நின்று விடவில்லை. தலைவனைக் கண்டதனுல் தன் மனத்தைப் பறிகொடுத்துவிட்டுத் தவிக்கும் தலைவியைப் போலவே, இம்முன்னுரையைப் படிப்பதனுல் நம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டுத் தவிக்கும் நிலையில் நம்மை வைத்துவிட்டிருக்கின்ருர்! அவர் அறிமுகப் படுத்தியிருக்கும் பாத்திரங்கள் மூவரும் ஒரே நோக்கமுடையவராய்க் காணப்படுகின்றனர்! எனினும் ஒருவர் கருத்தை மற்றவர் தெரிந்துகொள்ளாமையால் மூவரும் துன்பமுற்று நலிகின்றனர்! ஐயோ! ஒரே வீட்டில் இருந்துகொண்டு ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ளாமல் மூவரும் மனக்கலக்கம் உடையவராய்த் துன்பப்படுகின்ருர்களே! இவ்வெண்ணமே நம்மைக் கதையை மேலும் படிக்கத் தூண்டுகின்றது. அவர்கள் மற்றவர் மனத்தைப் புரிந்துகொண்டார்களா? தம்மைத் தாமே துன்புறுத்திக் கொள்ளுவதனை நிறுத்திக் கொண்டார்களா?

இம்மூவருள்ளும் தோழி தன் மனத்தில் இருப்பதனைச் செவிலியிடம் கூறத் துணிந்துவிட்டாள்! எனவே இனிக் கதை தொடங்கும்! ஆனல் அவள் ஏன் வளைத்து வளைத்துப் பேசவேண்டும்? தலைவி செய்தது செவிலிக்கும் அவளுடைய தாய் தந்தையருக்கும் தெரியாது என்பது உண்மையே! ஆனல் அவர்கள் அதனை ஏற்றுக்கொள்ளுவார்களா என்று நாம் எண்ணிப் பார்க்கவில்லையே! இவ்

வெண்ணமே தோழியைத் தயங்கித் தயங்கிப் பேசச்செய் திருக்கின்றது! அவர்கள் ஏன் ஒருவர் கருத்தை மற்றவ ருக்குத் தெரிவிக்காமல் மனம் புழுங்கித் துன்பமுற்ருர் கள் என்பதும் இப்பொழுதுதான் புலப்படுகின்றது! ஒரு வருக்கு மற்றவர் மீதுள்ள ஐயமே இதற்குக் காரணம்!

தலைவியும் தோழியும் ஒருபுறமும், செவிலி, தாய், தந்தை, சுற்றத்தார் இவ்வனைவரும் ஒருபுறமுமாகப்பிரிந்து இயங்குவதனை நாம் உணர்ந்து கொள்ளுகின்ருேம். தலைவி தனக்கு வேண்டிய காதலனைத் தேடிக்கொண்டுவிட்டாள்! அவளுக்குத் தக்க கணவனைத் தேடித்தர பிறர் முனைந்திருக் கின்றனர். வெட்கம் காரணமாய் உண்மையைச் சொல் லத் துணிவில்லாமல், தாய் தந்தையர் செய்வனவற்றைத் தடுக்கக் கூடாமல், தலைவி துன்பப்படுகின்ருள்! மணப் பருவத்தில், இவள் இப்படி வாட்டமுற்று உடல் நலம் கெட்டுக் காணப்படுகின்ருளே என்று செவிலி துன்பப்படு கின்ருள்! தலைவியின் செயலை வெளிப்படுத்தினுல் அதனைச் செவிலி ஏற்றுக்கொள்ளுவாளோ மாட்டாளோ என்று அறியமாட்டாமல் தோழி துன்பப்படுகின்ருள்! இவர் களுடைய நற்காலம்,அயலார் மணம்பேச வந்துவிட்டனர். நடந்து முடிந்த உண்மையை வெளிப்படுத்தத் தோழி துணிவுகொண்டாள்!

ஆசிரியர் முன்னுரையிலேயே தம் கதைக்குச் சுவை ஏற்றிவிட்டார்! அதனை உணரத் தொடங்கும் பொழுதே அது நம் மனத்தைக் கவர்ந்துவிட்டது! இப்பாத்திரங்கள் அனைவரும் தலைவி நல்வாழ்வுபெற்று இன்பமாய் இல்லறம் நடத்தவேண்டும் என்ற ஒரு நோக்கத்தையுடையவராகவே இருக்கவும், இவர்களுக்கிடையே ஒரு சிக்கலும் போராட்ட மும் தோன்றிவிட்டிருப்பதனை ஆசிரியர்குறிப்பிடுகின்ருர். மணப்பவளுக்குத் தனக்குப் பிடித்தவனைத் தெரிந்தெடுக் கும் உரிமை உண்டு என்பதனைப் பெற்ருேர் ஏற்றுக் கொள்ளத் தயங்கவில்லை! எனினும், தகுதியுடையவன் எனத் தாம் தெரிந்துகொண்டபின் தலைவி அவனை ஏற்றுக்

கொண்டிருப்பின் அவர்கள் மனமகிழ்ச்சி மிக்கவராய் இருந்திருப்பர்! தலைவி தெரிந்தெடுத்தவனை அவளுடைய பெற்றோர்கள் மிக்க தகுதியுடையவனே என்று ஒப்புவார்கள் என்பதனில் தோழிக்கு ஐயம் இல்லை! எனினும், அவர்களைக் கலந்துகொள்ளாமல், தலைவி தானே அவனைத் தேடிக்கொண்டுவிட்டது அவர்களுடைய பெருமைக்கும், மதிப்புக்கும் குறைகாண்பது போல் தோன்றுகின்றதல்லவா? இதுவே தோழியை ஐயத்திற்கும், அச்சத்திற்கும் ஆளாக்கியிருக்கின்றது. தலைவியும் இத்தகைய ஐயத்தைக் கொண்டவளாய்க் காணப்படுகின்றாள்!

மகளைப் பெற்று வளர்த்தவர் அவள் தக்க கணவனைப் பெற்று இல்லறம் நடத்தவேண்டும் என்று விரும்புவது இயல்பு! இந்நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள அவர்கள் தகுதியுள்ள மணாளனைத் தேர்ந்தெடுக்க உரிமையுடையவர்களே என்பதனைத் தலைவி ஏற்றுக் கொள்ளுபவளே! எனினும் இவை இயல்பாய் நிகழ்ந்தேறுவதற்கு முன் அவளுக்குச் சிறந்த காதலனைக் காணும் வாய்ப்பு கிடைத்துவிட்டது; அதனை அவள் துறந்துவிடாமல், பயன்படுத்திக்கொண்டு விட்டாள்! அவனைத் தமக்குள் தோன்றிவிட்ட தொடர்பு வெளிப்படுவதற்கு முன் மணம் பேசவரச்செய்து, தாய் தகப்பன் சுற்றத்தார் முதலியவரை ஏற்றுக்கொள்ளவைத்துத் தானும் ஒப்புவதாகத் தெரிவித்து நாடறிமணம் செய்துகொள்ள வேண்டும் என்பதே தலைவியின் நோக்கம்! நல்வினைப் பயனாய்த் தனக்குக் கிடைத்த நன்மையை, இயல்பாய்த் தாய் தந்தையர் தேடித் தந்தனைப் போலப் பெறவேண்டும் என்ற அவள் எண்ணம் நடந்தேறுமுன், இரவுக்குறியின் இடையீடுகள் அவளைத் துன்பபபடும்படி வைத்துவிட்டனவே! அயலார், மணம் பேசவந்தது அவள் மறைத்ததனை வெளியிட வைத்துவிட்டதே!

தனக்கும் தலைவனுக்கும் உள்ள தொடர்பு வெளிப்படக்கூடாது என்ற தலைவியின் நோக்கமே அவளைத் துன்

பத்தைத் துய்க்கவைத்துவிட்டது! காதலனைத் தனித்துக் காணமுடியாமற்போகவே அவள் மனம் புழுங்கினாள். அவள் மாறுபாட்டைக் கண்ட செவிலி, அவளுக்கு மருத்துவம் செய்ய முற்பட்டாள்! தன் நோய் மருந்தால் தீராது என்று தெரிந்தவளாய் இருந்தும், மறையைக் காக்க, தலைவி செவிலியின் சொற்படிக்கேட்டு நடக்க நேர்ந்தாள். இந்நிலையில் தன்னுடைய தலைவனின் சுற்றத்தார் வரச் செய்வதற்குமுன் அயலார் தன்னை மணம் பேச வந்துவிடவே, அவள் துன்பம் பெருகிவிட்டது! அவள் இதுவரை முடிவுசெய்து வைத்திருந்த ஏற்பாட்டினை மாற்றிக் கொள்ள வேண்டி நேர்ந்துவிட்டது! இனியும் தன் செயலை அவள் வெளிப்படுத்தாமலிருக்க முடியுமா?

அயலார் மணம்பேச வந்துள்ள சூழ்நிலையில், உண்மையை முதன் முதலாகத் தெரிந்துகொள்ளும் தாய் தந்தையர் மனநிலை எப்படி இருக்கும்? இதனை எண்ணிப் பார்த்தே தலைவி மனங்கலங்கினாள்! தான் இந்நிலையில் உண்மையைப் பெற்றோருக்கு உணர்த்துவது, அவர்களைத் தன் செயலால் கட்டுப்படுத்துவதாக ஆகுமன்றோ? இதுவோ அவள் தன்னைப் பெற்று வளர்த்தவருக்குச் செய்யக் கூடிய கைம்மாறு? தனக்கு நன்மையையே தேடிக் கொண்டாள் எனினும், அதனைத் தன் பெற்றோரும் அவ்வாறு ஏற்றுக் கொள்ளுவர் எனினும், இப்பொழுது அயலார் முன்னிலையில் உண்மை வெளிப்படுவது அவள் துடுக்கும், துணிவும் மிக்கவள் என்பதனை வெளிப்படுத்துவதனோடு, அவளுக்குத் தன் பெற்றோரிடத்து மதிப்பு சிறிதும் இல்லை என்றும் புலப்படுத்தும் அன்றோ?

தலைவி துன்பம் எதுவும் இல்லாமல் தன்னை எளிதில் காத்துக்கொள்ளக் கூடும்! செவிலி மருத்துவரை அழைத்த பொழுதே அவள் தன் காதலனுடன் வெளியேறிவிட்டிருக்கலாம். இதனை 'அறந்தலை பிரியா ஆறு' என மரபு ஏற்றுக்கொள்ளும்! எனினும் அவளுடைய தாய் தந்தையருக்கு இது எவ்வளவு மன வருத்தத்தை உண்டுபண்ணி

விடும்? இந்நிலை அவர்களுக்கு ஏற்படக் கூடாது என்றே தலைவி செவிலி செய்வனவற்றைப் பொறுத்துக்கொண்டிருந்தாள்! ஆனால் இப்பொழுது அயலார் மணம்பேச வந்து விட்டனரே! அவள் அவர்களைக் கட்டுப்படுத்தக் கூடுமா?

வேறு வழியின்றி, தன் தாய் தந்தையரைக் கட்டுப்படுத்தத் தலைவி துணிந்துவிட்டாள். இதனால், அவர்கள் சினம்கொண்டு ஒப்புதல் தர மறுப்பினும், தான் தன்னுடைய இன்பத்தைப் பொருட்படுத்தாமல், அவர்களுக்குக் கட்டுப்பட்டவளாக அடங்கி நடக்கவே விரும்புவதாகத் தோழியைத் தெரிவிக்கச் சொல்லியிருக்கின்றாள். தாய் தந்தையர் தன்னைத் தான் தெரிந்துகொண்டவனுக்கு அளிக்க மறுத்தாலும்கூட, அவனோடு சென்றுவிட அவள் ஒப்பாளாம்! கன்னியாகவே இருந்து நோன்பு புரிவாளாம்! தன்னை ஈன்றோரிடத்து அவள் கொண்டிருந்த மதிப்பின் எல்லை எத்தகையது!

தாய் தந்தையர் தலைவியின் செயலை ஏற்காவிடின் கதை அவல முடிவை உடையதாகும்! எந்தத் தாய் தந்தையர் தம் மகள் கன்னியாகவே இருக்க மனமொப்புவர்? எனவே தன்னைப் பெற்றோரிடத்துத் தான் கொண்டிருந்த பெருமதிப்பைப் புலப்படுத்த அவள் கூறிய சொற்களே, அவர்களை அவள் செயலை ஏற்றுக்கொள்ளத் தூண்டும் ஆற்றல் வாய்ந்தனவாய் இருக்கக் காண்கின்றோம்! இத்தலைவிக்குத் தோழியாக வாய்த்தவள் இவளைவிடத் திறமை மிக்கவளாக இருப்பதனைக் காண்போம்! செவிலி தான் கூறுவனவற்றை ஏற்றுக்கொண்டால், அது தாய் தந்தையர், சுற்றத்தார் இவரனைவரும் ஒப்புவதற்கு ஈடாகும் என அவள் அறிவாள். எனவே செவிலியைத் தான் கூறுவனவற்றை ஏற்றுக்கொள்ளச் செய்ய அவள் பெரும் பாடுபட்டிருக்கிறாள். தன் முழுத்திறமையையும் பயன்படுத்தித் தலைவியின் செயல் 'இயல்பானது; நன்மையைப் பயப்பது' என நிலைநாட்டியிருக்கின்றாள்!

தனக்கு நன்மையைத் தேடிக்கொண்டவளே யெனி னும், தலைவி அதற்கு ஊறு நேரும் முறையில் பெற்றோர் நடந்துகொண்டாலும், தான் அவர்களுக்கு அடங்கி நடக் கவே விரும்புவதாகக் கூறியிருப்பது நம்மை அவளுடைய நற்குணத்தை உணர்ந்துகொள்ள வைக்கின்றது. இவ ளைப் போலவே, தோழியும் செவிலியிடத்து மதிப்பும் அச்ச மும் கொண்டவளாய் இருக்கக் காண்கின்றோம். எனவே கபிலர் தாம் நல்லியல்பு நிறைந்த ஓர் இளநங்கையின் சரி தையை நமக்கு இப்பாட்டின் வாயிலாய்த் தெரிவிப்பதனைத் தம் முன்னுரையாலேயே அறிவித்து விட்டிருக்கின்றார்! சான்றோர் சிறப்புகளைப் பாராட்டுவதனைப் பெரிதும் விரும்பியிருந்தவர், குணக் குறைவான ஒழுகலாற்றையோ கதையையோ கூறுவாரா?

# 5. அமைப்பு

இப்பாட்டில் பொதிந்து கிடக்கும் கதையைக் கூறுபவள் தோழி. கேட்பவள் செவிலி. தோழியினுடைய தாய் செவிலியின் இயல்பு குணம் முதலியவற்றைத் தோழியைக் காட்டிலும் நன்கு தெரிந்து கொண்டிருக்கக் கூடியவர் வேறு யார் இருக்கக்கூடும்? ஆகவே அவளைத் தான் கூறுவனவற்றை முற்றிலும் ஏற்றுக்கொள்ளச் செய்யத் தோழி பலவகை உத்திகளைக் கையாண்டு இக்கதையை விவரித்திருக்கின்றாள். அவளுடைய திறன் வியக்க வியக்க விரிவுடையதாகக் காணப்படுகின்றது! அதனைத் தெரிந்து கொள்ளுவது, கபிலருடைய திறனை எல்லை காண முற்படுவதற்கு ஒப்பாகும்! எனவே, கதையின் அமைப்பு முறையைக் காண்பதனை, அவளுடைய திறனை வியக்கும் வகையில் ஆராய்வதே பயனளிக்கக் கூடியதாம்!

தோழி இதுவரை தனக்குத் தெரிந்தவற்றை வெளிப்படுத்தாமல் அடக்கிவைத்திருந்ததற்குத் தன் அச்சமே காரணம் என்று கூறியிருக்கின்றாள்; இவ்வச்சம் இருவகைப்பட்டது என்று அவளால் அறிகின்றோம். மறை புலப்படாமல் இருக்கச் செய்யவேண்டும் என்ற ஆர்வம், அவள் எதனையும் விவரமாகப் பேசமுடியாமற் செய்திருந்தது; அவள் தன்னையும் மீறி, உண்மை வெளிப்பட்டுவிடப் போகின்றதே என்று பேசுவதனையே நிறுத்திக்கொண்டு விட்டாள் என்று கருதத் தோன்றுகின்றது. இது தலைவியின் நன்மையைக் கருதி எழுந்த அச்சம். இரண்டாவது அச்சம் அவள் தன்நிலையைக் கருதியதனால்தோன்றுவதாம். தலைவியின் செயல்களுக்குத் தோழியும் பொறுப்பேற்றுக்

டுகொள்ள வேண்டியவளே யன்ருே? எனவே, செவிலி தன்னைக் கடிந்துகொள்ளப் போகின்ருளே என்ற அச்சம் வல்லமையுடையதாய் அவளை வாயைத் திறக்க வொட்டாமல் செய்திருந்தது!

இவ்வாறு இருவகை அச்சங்களுக்கு இடையே அகப்பட்டுக்கொண்டவளாய்த் தான் துன்பப்படுவதாகத் தோழி கூறியிருக்கின்ருள். தன்னுடைய செயலை—அல்லது செயலற்ற நிலையை—விளக்கத் தோழி தன்னை அந்நிலையில் செலுத்திய அச்சங்களைக் குறிப்பிடுவது ஓர் உத்தியே! செவிலிக்குத் தன்நிலையைப் புலப்படுத்த வேண்டும் என்று அவள் அவ்வாறு கூறவில்லை. அவள் தலைவியின் நிலையைப் புலப்படுத்தவே பேசுகின்ருள் அன்ருே? தான் கூறுவனவற்றை முற்றிலும் செவிலியை ஏற்றுக்கொள்ளச் செய்யவேண்டும் என்பது தோழியின் அவா! அவள் தன்னைக் கேள்விகள் கேட்டு தான் கூறுவனவற்றிற்கு அயலாக எதனையும் வெளிப்படுத்தித் தெரிந்துகொள்ள மாட்டாமல் செய்யவேண்டும் என்பதுவும் அவள் விருப்பம்! இவை நிறைவேறுவதற்காகவே தோழி தன் நிலையையும் தன் தாய்க்கு விளங்கக் கூறியிருக்கின்ருள்.

தாம் செய்தனவே இயல்புடையன, தகுதியுடையன என்று பிறரை எண்ணிக்கொள்ளச் செய்தலில், வயது முதிர்ந்தவரினும் இளைஞர்க்கு விருப்பம் மிகவுண்டு! தம்முடைய தவறுகளை உணரும் மனப்பான்மை, அதுவும் பிறர் காணும் முறையில் உணர்ந்துகொள்ளும் குணம் வயதும் அறிவும் நிரம்பி, அடக்கமும் மிக உடையவருக்கே கூடும்! இது செவிலிக்குத் தெரிந்திராததன்று. இளைஞர் தம் செயல்களைத் தகுதியுடையன எனக் காட்டும் ஆர்வம் உடையவரேனும், அச்சம் காரணமாக அவர்கள் தாம் அரைகுறையாக உணரும் தம் தவறுகளை ஒப்புக்கொண்டு விடுவர்! எனவே அவர்கள் அச்சத்தோடு கூறுகின்றவற்றைப் பிறர் உண்மையென ஏற்றுக்கொள்ளுகின்றனர். மக்களுடைய இப் பண்பைத் தோழி தன் தாயினிடத்தே

நேரிற்கண்டு தெரிந்துகொண்டிருந்தாள். அதனால் தன்னை அச்சம் உடையவளாகக் காட்டிக்கொண்டிருக்கின்றாள்!

அச்சம் காரணமாக—இருபேர் அச்சங் காரணமாகப் —பேசமாட்டாமல் இருந்துவிட்டவள், இப்பொழுது எப்படிப் பேச முன்வந்தாள்? அவளுடைய அச்சம் எப்படி அகன்றது? துணிவு எப்படித் தோன்றிற்று? இவற்றையும் அவளே விளக்குகின்றாள். எனவே, அவள் கூறுவன உண்மையாக இருக்கவேண்டும் என்ற உறுதி நமக்கும் ஏற்படுகின்றது. செவிலியைப் பற்றிக் கேட்பானேன்! அச்சம் மிக உடைய தன் மகள், தனக்கு உண்மையை உள்ளபடிக் கூறுவதாகச் சொல்லிவிட்டு, அதன் பின்னர் மிக்க துணிவுடன் தன் மனக் கற்பனையை உண்மையோடு கலந்து கூறுவாள் என்று அவள் எப்படிக் கருதுவாள்? செவிலிக்குத் தன் மகள் தன்னை ஏய்க்கக் கூடிய திறன் மிக்கவள் என்பது நன்றாகத் தெரிந்திருந்தும், இந்நிலையில் தன்னை ஏய்க்கத் துணியமாட்டாள் என்று அவள் எண்ணிக்கொள்ளச் செய்யும் முறையில் தோழி நடந்துகொண்டிருக்கின்றாள்.

பாடலின் தொடக்கம் செவிலியின் நிலையை விளக்கி அதற்கு இரக்கங்காட்டுவதுபோல் அமைந்திருக்கின்றது! தோழியின் அச்சத்தை அகற்றியது இதுவேயாம்! தன்னுடைய தாய் படும் துன்பத்தைக்கண்டு, இம்மகளுக்கு மனம் பொறுக்கவில்லை! அவளுடைய துன்பத்தைப் போக்குவது தன்னுடைய கடமை என்பதனை உணர்ந்தாள். எனினும் அச்சம் அவள் வாயை அடைத்துக்கொண்டிருந்தது. தாயின் நிலை பொறுக்க முடியாத அளவுடையதாகிவிடவே, தோழி தன் அச்சத்தைக் களைந்தாள்; பேச முன்வந்தாள்! அவளுடைய தாயன்பே, அச்சத்தைப் போக்கிற்று. இதனை அவள் செவிலியைக் கேட்பிக்க, 'அன்னை' என்ற அண்மைவிளிச் சொல்லைக் கூறும் வாயிலாக அவளுக்கும், நமக்கும் ஒருசேர

உணர்த்தி யிருக்கின்ருள். அச்சம் அகன்றதனை ஒப்பலாம். ஆனல், துணிவு எப்படித் தோன்றிற்று?

தோழிக்குப் பேசும் துணிவை ஊட்டியவள் தலைவி. அவள் 'நம் அன்னைக்கு நடந்தவற்றைக்கூறி விடுவது குற்றமாகுமா?' என்று சொன்ன சொற்களே தோழிக்குத் துணிவைத் தந்தன! எனினும், தனக்குத் துணிவு தந்த சொற்களைக் கொண்டு கூறுமுன், தோழி சான்ருேர் இயல்புகளை முற்றிலும் உணர்ந்துகொண்டவள்போல் அவர்களைப்பற்றித் தன் அன்னைக்கு எடுத்துச்சொல்லி யிருக்கின்ருள்! இவளுடைய திறனுக்கு இவளை ஈன்றெடுத்த செவிலியே மயங்கி யிருக்க, நாம் எப்பொருட்டு? தனக்குத் துணிவைத் தந்த சொற்களைக் கூறுமுன், சான்ருேரைப்பற்றித் தோழி வியந்துரைத்தது, செவிலி தன் அச்சத்தை — அதன் நிலையை — நன்கு புலப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றேயாம்! அச்சம் அகன்று, துணிவூட்டப்பட்டுப் பேச முன்வந்தாளே யெனினும், பிறரால் புகுத்தப்பட்ட துணிவாகையால், அது தக்க சமயத்தில் இவளைக் கைவிட்டு ஓடிவிட்டது! அச்சம் மீண்டும் பற்றிக் கொண்டு விட்டது!'' அவள் என் செய்வாள்! பேச முன்வந்துவிட்டாள்! இனி நிறுத்தின், அதுவே செவிலியை ஐயங்கொள்ளச் செய்து விடும். ஆகவேதான் கூறவந்தவைகளை விட்டுவிட்டு, தொடர்பு சிறிதும் இல்லாத ஒரு செய்தியை அவள் வெளி யிடத் தொடங்கினள்.

அன்னையை இம்முறையில் தன் நிலையைப் புலப் படுத்திக்கொண்டு மன நிறைவினைப் பெறச் செய்யவே தோழி சான்ருேர் செய்தியைக் கூறியிருக்கின்ருளே யல்லாமல், உண்மையாய் அச்சம் கொண்டிருந்ததனு லன்று! இதனை அவள் இம் முன்னுரைப் பகுதியின் இறுதிக்குள்ளேயே தெளிவும், துணிவும் தோன்றக் கூறியிருப்பவற்றைக்கொண்டு அறியலாம்! வேறு வழி யின்றிச் செவிலி, தோழியும் தலைவியும் சேர்ந்து செய்து

விட்டதனை ஏற்றுக்கொள்ள நேர்ந்தாலும், அவள் தம் செயலைக் குணக்குறைவுடையதாகத் தன் மனத்தே கருதியிருக்கலாமல்லவா? அந்நிலையையும் ஏற்பட வொட்டாமல் செய்யவேண்டும் என்று சூழ்ந்தே, தோழி இங்குச் சான்றோர் நிலையை வியந்து கூறியிருக்கின்றாள். உயர்ந்தோரைப்பற்றி வியந்துரைப்பவள், அவர்களால் கடிந்துகொள்ளத் தக்கனவற்றைச் செய்பவளாய் இருக்க மாட்டாள் எனச் செவிலி கருதவேண்டும் என்பது தோழியின் நோக்கம்!

சான்றோரை இங்குக் குறிப்பிடாமல் தம் செயல் தகுதிமிக்கதே என்று செவிலியை உணர்ந்துகொள்ள வைக்க உணர்ந்து, மகிழ்ந்து, ஏற்றுக் கொள்ளவைக்கப் போதிய திறன் தோழிக்கில்லைபோலும்! இவ்வாறு நாம் கருதிவிடக்கூடாது! உண்மையில், அவள் தலைவியும் தானும் சேர்ந்து தேடிக்கொண்ட காதலனுடைய பெயர், நிலை, தொடர்பு முதலியவற்றை வெளிப்படுத்துவதனால் செவிலியை வாயடைத்துப்போகும்படிச் செய்யக்கூடும்? எனினும் அவள் அதனைச் செய்யாமல் — நேர்வழியில் செல்லாமல் — சுற்றி வளைத்துச் சென்று தம் செயல் தகுதியுடையதே என நாட்டியிருக்கின்றாள்! இவ்வாறு தோழி செய்ததற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன. அவள் இவ்வழியைக் கையாண்டிருப்பது அவளுடைய திறனின் மாண்பைப் புலப்படுத்துகின்றது.

உலகில் எவரும் உண்மையை-கலப்பற்ற உண்மையை ஏற்றுக்கொள்ள முன்வருவதில்லை! இதனை ஒவ்வொருவரும் தன் அனுபவத்தாலேயே உணர்ந்து கொள்ளலாம். இதற்குத் தக்க காரணம் இருக்கின்றது. மனிதன் உண்மையெனக் கருதிக்கொள்ளுபவை யனைத்தும் அவனுடைய மனக்கற்பனைகளே யல்லாமல் பிறவல்ல என மேனாட்டு விஞ்ஞானிகள் கருதுகின்றனர். ஐன்ஸ்டனுடைய தொந்த வாதம் (Theory of relativity) அணுவைப் பிளக்க முடிந்த வல்லமை, இவை இரண்டும்

சேர்ந்தே அவ்விஞ்ஞானிகளை அவ்வாறு கருதச் செய்திருக்கின்றன. இதனை அணுவைப் பிளந்து பார்க்காமலேயே நம் நாட்டுப் பெரியோர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தே கூறிவருகின்றனர்.

விஞ்ஞானிகள் — மேலைநாட்டு விஞ்ஞானிகள் — நம் நாட்டுச் சான்றோர் ஆகிய இருதிறத்தவரும் ஒப்பக் கூறுவது நம் வாழ்க்கை உண்மையும், பொய்மையும் கலந்த, எளிதில் பிரித்துணரக்கூடாத ஒரு கலவை என்பதாம். எனவே கலப்பற்ற உண்மை மக்கள் மனத்தைப் பற்றுததனில் வியப்பில்லை. வாழ்க்கையாகிய கலவைக்கு உண்மையே உறுதியான அடிப்படைப் பொருளாகையால் மக்கள் உண்மைக்கே மதிப்புத் தருகின்றனர்! பெரியோர் அதனையே பாராட்டுகின்றனர்! அதனைக் கலப்பற்ற நிலையில் காண்பதே நற்காட்சியாகும் எனக் கூறுகின்றனர்! தோழி நேர்வழியில் செல்லாததற்கு உலகவழக்கம், கபிலர் உண்மையின் கூறுபாடுகளை உணர்ந்திருந்தமை என்ற இரு காரணங்கள் இருப்பது புலப்படுகின்றது! இம்மட்டோ!

இப்பாடலின் தொடக்கம் ஒரு போராட்டத்தை விவரிப்பதாய்த் தோற்றுகின்றது. செவிலியும் தோழியும் நேர் எதிரிடையான கட்சிகளைச் சேர்ந்தவர்! செவிலி விரும்பி ஏற்றுக்கொள்ள முடியாத தொன்றினைத் தோழியும் தலைவியும் செய்து விட்டிருக்கின்றனர். தம் செயலை அவளை விரும்பி ஏற்றுக்கொள்ள வைக்கவே தோழி பேச முன்வந்திருக்கின்றாள்! எனவே, தோழி உண்மையையே — கலப்பற்ற உண்மையையே — கூறினும்கூட அதனைச் செவிலி மனமுவந்து ஏற்றுக் கொள்ளுவாள் என்பது உறுதியாகுமா? நமக்கு எதிராக வாதாடுபவர். உண்மையான வாதங்களையே எடுத்துரைக்கின்றார் என்று ஏற்றுக்கொள்ளும் உள்ளப்பாங்கு நம்மில் எத்துணைப்பேருக்கு இருக்கும்? இதனை உணர்ந்தே, தான்

உண்மையை உள்ளவாறே கூறினும் அதனை ஏற்றுக் கொள்ளச் செவிலி தயங்குவாள் என்று கருதியே, தோழி திரித்துக்கூற முன்வந்தாள்! மேலும், இப்பொழுதுள்ள மன நிலையில், செவிலி தான்கூறும் உண்மையை ஏற்க மறுத்துவிட்டால், விளைவு எல்லோருக்கும் பெருந் துன்பத்தைத் தருவதாகி விடுமன்றோ? 'சினவாதீமோ' என்றது இதன் பொருட்டே!

சான்றோர் நிலையையும், இயல்பையும் எடுத்துக் காட்டி அதனைத்தான் பெரிதும் வியப்பவள்போல் தன் அன்னையை உணர்ந்துகொள்ளச்செய்ததனால்,தோழி தான் கூறுவன குணக்குறைவுடையன ஆகமாட்டா என்ற எண்ணத்தைச் செவிலியைக் கருதிக்கொள்ளுமாறு தூண்டிவிட்டாள். தான் தூண்டிவிட்ட கருத்து அவள் மனத்தில் நன்கு பதிந்துவிட்டது என்பதனை அவள் முகக் குறியால் தெரிந்துகொண்டவள், காலந்தாழ்த்தாது, அவள் குணக்குறைவுடையதாகக் கருதக்கூடிய தம் செயலைக் குறிப்பிட்டுவிட்டாள். இவ்வளவு முன்னேற்பாட்டுடன், திட்டமிட்டு, வெற்றி பெறுவோம் என்ற துணிவுடன் தெரிவித்தாளே யெனினும், 'இருவேம் ஆய்ந்தமன்றல் இது' என்று அவள் தெரிவித்தபொழுது, செவிலி தன் காதுகளைப் பொத்திக்கொண்டிருக்க வேண்டும்! வியப்பும், திகைப்பும் சேர்ந்த தன் மனநிலையை அவள் வெளிப்படுத்திக் காட்டியிருக்க வேண்டும்! 'இவர்கள் இத்துணைத் துணிவுடையவர்களாகிவிட்டதனை நான் இதுவரை அறிந்திருந்தேன் இல்லையே' என்ற எண்ணம் அவளை வியக்கவைத்தது. 'இதனைத் தந்தை தன்னையர் ஏற்றுக் கொள்ளச் செய்யவேண்டுமே' என்ற எண்ணம் அவளுக்குத் திகைப்பைத்தந்தது. இவற்றை உணர்ந்துகொண்ட தோழி, அவள் திகைப்பைப் போக்கி அவள் எப்படித் தந்தையையும் சுற்றத்தாரையும் ஏற்கச் செய்யக்கூடும் என்ற வழியைக் கூறியிருப்பது, திறனும், துணிவும் சேர்ந்து வெளிப்பட்ட செயலேயாம்!

'நாம் வகுத்துக்கொண்ட முறையில் நம்மை வாழ வைக்கத் தாய் தந்தையர் விரும்பாவிடின், நான் தனியளாய் நோன்புசெய்து காலங்கழிக்க உறுதிகொண்டு விட்டேன்' என்று தலைவி கூறினளாகத் தோழி கூறியது, செவிலிக்குத் தாய் தந்தையரையும் சுற்றத்தாரையும் எவ்வாறு தலைவியின் செயலை ஏற்றுக்கொள்ள வைக்கலாம் எனக்காட்டிய வழியேயாம்! செவிலியின் முன்னர்ப் பேசுவதற்கும் அஞ்சியவளாகத் தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டவள், இப்பொழுது அவளுக்கு வழிகாட்ட முன்வந்திருப்பது வியப்பிற்குரியதன்றோ? நடிப்புக் கலையிலும் தோழி நல்ல தேர்ச்சியுடையவள் எனத் தெரிந்து கொள்ள முடிகின்றது! இவ்வழியைக் காட்டியவுடன், இதனைச் செவிலியை ஏற்றுக்கொள்ளச் செய்ய, தலைவியின் இரங்கத்தக்க நிலையை அவளைத் தோழி நினைத்துப் பார்க்கச் செய்திருக்கின்றாள். தான் இதுவரை செய்தவை பயனளிக்காமற் சென்றது ஏன் என்பதனையும் இப்பொழுது செவிலி உணர்ந்து கொண்டிருக்க முடியும்! தான்காட்டிய வழியினை மேற்கொள்ளச் செவிலி தயங்குவாள் என உணர்ந்த தோழி, மீண்டும் ஓர் உத்தியைக் கையாண்டு அவளைத் தன் பிடிக்குள் அகப்படுத்திக் கொண்டிருப்பதனைக் காண்கின்றோம்!

முன்னர்ச் சான்றோரின் இயல்பையும், தகுதியையும் விவரித்துத் தானும் அவர்களைப்போல் இருக்க விழைபவளே என்ற எண்ணத்தைச் செவிலிக்குத் தோற்றுவித்தவள், இப்பொழுது தன்னைச் சான்றோருள் ஒருத்தியாகவே கருதும்படி ஓர் உவமையைக் கையாண்டிருக்கின்றாள். 'இருவேந்தரையும் போரினின்றும் விலக்க வழிதெரியாத சான்றோரைப்போல, நானும் ஆற்றல் ஏன்?' என்று கேட்பவள், தான் அச்சான்றோரினும் தகுதி மிக்கவள் எனத் தருக்குடன் கூறிக்கொள்ளுபவள் ஆகாளோ? இத்தகைய உயரிய நிலைக்குத் தன்னை உயர்த்திக்கொண்ட பின்னர், 'நாங்கள் தாய் தந்தையரைப்போல்

துருவித்துருவி ஆராய்ந்து பாராமல் தலைவன் ஒருவனைத் தேடிக் கொண்டுவிட்டோம்; எனினும், அவர்கள் தேடித் தேடி அலைந்தாலும் இத்தகைய தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டிருக்க முடியாது' என்று கூறுகின்றாள். இதனால் தலைவன் தம்மினும் எல்லாவகையிலும் உயர்ந்தவன் என்பதனைக் குறிப்பாய் வெளிப்படுத்திவிட்டாள்! இப்பொழுது செவிலிக்குச் சுவை ஏற்பட்டுவிட்டது! எனினும் தன் மகள் கூறுவன உண்மையே என்ற உறுதியை வேண்டினாள்! இதனை உணர்ந்த தோழி 'நான் கூறுவதற்காக இல்லாமல், நீயே நடந்தவற்றைக் கேட்டு உன் ஆராய்ச்சியாலேயே நான் கூறுவனவற்றின் உண்மையைப் புலப்படுத்திக்கொள்' என்ற தொடக்கத்துடன் கதையைக் கூறுகின்றாள்!

தன் அன்னையை நன்றாக அகப்படுத்திக்கொண்டு விட்டதனை உணர்ந்துகொண்ட தோழி, கதையைத் தொடங்கும் போழுதே, 'படுபுள் ஓப்பி எல்பட வருதியர் என நீவிடுத்தலின்' இச்செயல் நிகழ்ந்தது என்று, தம் செயலுக்கு அவளைப் பொறுப்பேற்றுக்கொள்ள வைத்திருக்கின்றாள்! செவிலியின் ஏவலை மேற்கொண்டு தினைப் புனக் காவலுக்குச் சென்றவர், தம் பணியைச் செவ்விதாகச் செய்தனராம். நண்பகற் காலத்தில் பறவைகள் தாம் 'வீழ்பதிப் படர்ந்தன;' ஆனால் இவர்கள் அவ்வாறு செய்வதிற்கில்லையே! செவிலியின் பொறுப்பின் அளவு இதனால் அதிகமாக்கப்படுகின்றது. அவள் கட்டளையை நிறைவேற்றுபவருக்கு நேர்ந்தவைகளுக்கு அவளே பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டுமன்றோ? மழை பெய்தது; பரணில் இருந்தார்களே எனினும் இவர்கள் நனைந்துவிட்டனர். எனவே அருவியாடினர். அருவி ஆடுவது இவர்கள் மனத்தைப் பற்றிவிடவே, செவிலியின் கட்டளையை நினைத்துக்கொண்டு, அவ்விருப்பத்தை மாற்றச்

சுனை குடைந்தனர். பின்னர், தம் கூந்தலைப் பிழிந்து கொண்டு, அது உலர்வதற்குள், கலைந்த ஒப்பனையை மீண்டும் சரிசெய்து கொள்ளப் பூப்பறித்தனர்.

கதையின் முதனிகழ்ச்சி இவ்வாறு விரைவில் நடந்து முடிந்தது. அடுத்த நிகழ்ச்சியை உடனே தெரிவித்தால், கதையின் அளவு சிறிதாகி விடும். தலைவன் வருகையை இவர்கள் எதிர்பார்த்திருந்தனர் என்ற உண்மையும் செவிலிக்குப் புலப்பட்டுவிடும்! எனவே அவர்கள் பூப்பறித்த தனைத் தோழி நன்கு பயன்படுத்திக் கொண்டாள். ஒரு நூறு வகைப் பூக்களைத் தாம் பறித்ததாக விவரித்திருக் கின்றாள். இப்பூக்கொய் படலம், கதையின் முன்னுரையின் எல்லைக்கும் விரிந்து காணப்படுகின்றது. இவ்வாறு கதையை நீட்ட ஆசிரியர் அவர்கள் பறித்த பூக்களின் எண்ணிக்கையைப் பெருக்கியதனோடு, பூப்பறித்து முடிந்த பின் அவர்கள் செயல்களைத் தெரிவிக்க மறுகி, குவைஇ, பயிற்றி, தைஇ என நீண்டொலிக்கும் வினைச்சொற்களைப் பயன்படுத்தியிருக்கின்றார். இவற்றை அவர்கள் புனக் காவலுக்குச் சென்றவுடன் செய்தவற்றை விவரிக்கும் ஏறி, வாங்கி, ஆடி, பாடி என்ற சொற்களோடு ஒப்பிட்டுப்பார்க்க, ஆசிரியர் கையாண்டிருக்கும் உத்தி நமக்குப் புலப்படும்!

தலைவியும் தோழியும் பறித்ததாக விவரிக்கப்பெறும் பூக்களில் பெரும்பாலன மலையிற் கிடைப்பனவல்ல. கதையை வளர்த்திக் காட்டவே ஆசிரியர் பூக்களின் எண்ணிக்கையைப் பெருக்கிக் கூறியிருக்கின்றார். உண்மையில் அவர்கள் பறித்த பூக்கள் சிலவேயாம்! செங்காந்தட்பூக்களை, பரேரம்புழகுடன் பறித்துச் சூடிக்கொண்டு, அவர்கள் அசோக மரத்தின் அடியில் சென்று நின்றனர். அவர்கள் கண்கள் சிவப்பேறியிருந்தமை, அவர்கள் பறித்த பூக்களின் நிறம் அவர்கள் பாடிய பாடலின் கருத்து, அவர்கள் சென்று நின்ற மரத்தின் தளிர்களின் நிறம் இவற்றைக் குறிப்பிட்டதனால், ஆசிரியர் இவ்விருவரும் செவ்

வணிபூண்டு தலைவன் வருகையை எதிர்பார்த்த வண்ணம் இருந்தனர் என்று நமக்குப் புலப்படுத்தி விட்டார். இதனைச் செவிலி கண்டுகொள்ளாமல் இருக்கவும், தலைவன் வருகை எதிர்பாராது நிகழ்ந்த நிகழ்ச்சியே என அவள் கருதவுமே பூப்பறித்ததனைத் தோழி விவரிக்கின்ருள்.

அவர்கள் சிவந்த கண்களையுடையவர்களாய் இருந்தது சுனை குடைந்ததன் விளைவு. பாடியது விளையாட்டு விருப்பத்தின் விளைவு. செங்காந்தளையும், புழகையும் பறித்தது அவையே அங்குமிகுதியாகக் கிடைத்தனாலேயே. சுனைகுடைந்தவுடன், காவலுக்குச் செல்லாமல், பூப்பறித்ததனைச் செவிலி கண்டிப்பதற்கில்லை. ஏனெனில் கலைந்த ஒப்பனையுடன் பெண்கள் தம்மைப் பிறர்காண இருப்பது தகாது. இத்தகைய காரணங்களுக்காகச் செவிலி, அவர்கள் செயல்களை உட்குறிப்பு ஒன்றும் இல்லாமல் இயல்பாய் நிகழ்ந்த செயல்களாக ஏற்றுக்கொள்ளுவாள். எனவே, அவளுக்குத் தலைவன் வருகை அவர்கள் எதிர்பாராமல் நிகழ்ந்த நிகழ்ச்சியாகத் தோன்றும்!

சற்றுக் களைப்பாற, அசோக மரத்தடியில் நின்றவர்களை வேட்டை நாய்கள் வந்து சூழ்ந்து கொண்டன. பின்னர்த் தலைவன் வந்தான். அவர்களைத் தன்னுடன் பேசவைக்கப் பெரும்பாடு பட்டான். இதுவே உண்மையாக நடந்தது. தோழிக்குத் தம் தொடர்பை வெளிப்படுத்தத் தலைவனும், தலைவியும் சூழ்ந்து நிறைவேற்றிய திட்டம் இது. இவர்களுக்கு வேட்டைநாய்கள் உற்ற துணையாய் அமைந்தன. ஆனல் தோழி செவிலிக்குக் கதையை இவ்வாறு தெரிவிக்கலாமா? எனவே முதலில் நிகழ்ந்த, நாய்கள் தம்மை வளைத்துக்கொண்ட செய்தியைத் தெரிவிப்பதற்கு முன், அவள் தலைவனுடைய அழகு, செல்வப் பெருக்கு, பண்பு முதலியவற்றை விவரிக்கத் தொடங்கியிருக்கின்ருள். இவ்விவரங்கள் முடிந்த பின்னரே, அவள் வேட்டைநாய்கள் தம்மைச் சூழ்ந்து

கொண்டதனைக் கூறுகின்றாள். இதனால் செவிலி, வேட்டைக்கு வந்த இளைஞன் ஒருவனை இவர்கள் தற்செயலாய்க் கண்டனர் என்று தெரிந்து கொள்ளும்படிக் கதையமைந்துவிட்டது!

பெண்கள் பெரிதும் விரும்புவது தம் காதலர் அழகுடையவராய் இருப்பதனையேயாம்! இவ்வியல்புக்கு ஏற்பத் தலைவனுடைய அழகையும், தோற்றத்தையும் வியந்து கூறுகின்றாள் எனினும், தோழி செவிலிக்குக் கதை கூறுகின்றோம் என்பதனை மறந்துவிடவில்லை. தாய் மிகவும் விரும்புவது தன் மருமகனாய் வாய்ப்பவன், நல்ல குணமும் செல்வமும் உடையவனாக இருக்கவேண்டும் என்பதேயாம்! செவிலி தலைவனுடைய நற்குணம், குலம், செல்வச்சிறப்பு முதலியவற்றைக் குறிப்பாய்ப் புலப்படுத்திக் கொள்ளும் முறையிலேயே தோழி அவன் அழகையும். அணிந்திருந்த பொன் அணிகளையும் வியந்தாள். செவிலியின் மனவிருப்பத்தைத் தெரிந்தவளாய் இருந்தும், தோழி அவன் அழகிற்கும், தோற்றத்துக்கும் சிறப்பளித்திருப்பது, 'இவ்வளவு அழகுடையவனைக் கண்டும், நாங்கள் மதியிழந்து விடவில்லை' என்பதனைத் தன் தாயை உணர்ந்துகொள்ளச் செய்யவேயாம். அவன் பெரும்பாடுபட்டும் இவர்கள் அவனுக்கு மறுமொழி தரவில்லை என்று கூறுகின்றாளன்றோ?

வெட்கங் காரணமாய்த் தாம் மறுமொழி தராமல் இருந்ததனைச் செவிலி வேறு விதமாகத் தெரிந்துகொள்ளும்படி விவரித்து வெற்றிபெற்ற தோழி, பின்னர் அவர்கள் அவனைக் காதலனாகக் கொண்டதற்கும் ஏற்ற காரணத்தைக் கூற வேண்டுமல்லவா? இதுவரை உண்மையைச் சற்றுத் திரித்துக் கூறிவந்தவள், இப்பொழுது தன் கற்பனைத்திறனை வெளிப்படுத்தத் தொடங்கினாள். யானை வந்ததும், இவர்கள் கலங்கியதும்

அவன் யானையை புறமுதுகிட்டு ஓடச்செய்து இவர்களைக் காத்ததும் தோழியின் கற்பனையே யன்றி உண்மையாக நிகழ்ந்தனவல்ல. இவ்வாறு நிகழாத சில நிகழ்ச்சிகளைக் கற்பித்துக் கூறியதனல், மதியுடம் படுத்தலாக நிகழ்ந்த தலைவன் வருகையை, தலைவியும் அவனும் முதன்முறை சந்தித்ததாக மாற்றிக் காட்டத் தோழியால் முடிந்திருக் கின்றது.

தங்களை யானையினின்றும் காத்ததற்காக, தலைவி தலைவனைக் காதலனாக ஏற்றுகொண்டு விட்டாளா? இல்லையே! அழகும், குணமும், செல்வமும், குடிப்பிறப்பும் உடைய அத்தலைவன் தம்மை யானையினிடமிருந்து காத்தபின், முருகனைச் சான்று காட்டி, சூளுரைத்து, தலைவியைப் பிறர் போற்றும் முறையில் பெருவாழ்வு பெறச் செய்வதாக உறுதியளித்த பின்னரே, தலைவி அவனைக் காதலனாக ஏற்றுக்கொண்டாள்! இதனை 'அறந்தலை பிரியா ஆறு' என்றே சான்றோர் கூறுவர்! தோழிதான் மேற்கொண்ட கடமையைச் செவ்விதாக, செவிலி ஏற்றுக்கொள்ளும் வகையில் செய்து முடித்து விட்டாள்! அறத்தொடு நிற்றல் இவ்வளவுடன் முடி கின்றது. ஆனல் பாடல் இன்னும் முற்றுப்பெற வில்லை!

தலைவி தேடிக்கொண்ட தலைவன் இன்னன் என்று தெரிந்தபின், செவிலிக்குப் பெருமகிழ்ச்சி யேற்பட்டு விட்டது! உண்மையில் அவனைத் தந்தை தன்னையர் முயன்றும் தம்வீட்டு மருமகனாக இவனைப் பெற்றிருக்க முடியாதே! தம் நிலைக்கு மிகவும் உயர்ந்த தலைவனைப் பெற்ற தலைவி, இதனைத் தயங்காமல் முன்னரே தெரிவித் திருக்கலாமே! அவனைத் தன் பெற்றோரை மணம்பேச அனுப்பத் தூண்டியிருக்கலாமே!

# 6. முடிவுரை

இப்பாடலின் முதல் முப்பத்துநான்கு அடிகள் முன்னுரையாய் இருத்தலைப்போலவே, இதனுடைய இறுதியில் உள்ள இருபத்து ஐந்து அடிகள் முடிவுரையாய் அமைந்திருக்கின்றன. இப்பகுதியால் தான் கூறிய கதை நிகழ்ச்சிகளின் விளைவைத் தோழி விவரித்தாள். தலைவன் நாள் தவறாமல் தன் காதலியைக் கண்டு மகிழ இரவு நேரத்தில் வருவான் என்றும், ஆனால் ஒருநாளேனும் அவன் தன் நோக்கம் நிறைவேறப்பெற்ற மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்லவில்லை என்றும், எனினும் அவன் மனக் கசப்புறாமல், இவள்மீது கொண்ட அன்பு குறையாமல், முதல்நாள் கொண்டிருந்த உழுவலன்புடன் நாள்தோறும் வந்து செல்வதனை நிறுத்தவில்லை என்றும், இதனாலேயே தலைவியின் நோயும் துன்பமும் பெருகின என்றும் இப்பகுதி தெரிவிக்கின்றது.

ஒருநாள்கூடத் தன் காதலியைக் காணமுடியாதவனாய்த் திரும்பநேரும் தலைவன், தன் ஒழுக்கத்தை — இரவில் அவளைக் காணவருவதனை — ஏன் நிறுத்திக் கொள்ளவில்லை? பயனற்றதெனக் கண்டும் அவன் நாள்தோறும் வந்து சென்றான் என்று தோழி கூறுகின்றாளே! அவன் அவ்வாறு வந்து சென்றது தன் பொருட்டுமட்டுமன்று; தலைவிக்காகவும் ஆம்! அவளுக்காகவே அவன் தன் ஒழுக்கத்தை மாற்றிக்கொள்ளவில்லை! ஒருநாளேனும் அவளைக்கண்டு, 'இவ்வொழுக்கம்பயனளிக்கவில்லையாகையால், நான் உன்னை மணக்க ஆவன செய்வேன்; அதுவரை பொறுத்திரு' என்று கூறியபின், தான் இரவில் அவள் ஊருக்குச் சென்று வருதலை

நிறுத்திக்கொள்ளவேண்டும் என்று அவன் எண்ணினான்! ஆனால் அவ்வாறு செய்ய இயலவில்லை. அவன் வருகை எச்சரிக்கையில்லாமல் நின்றுவிடின், 'அவனுக்கு என்ன நேர்ந்துவிட்டதோ' என்று அறியமாட்டாமல் தலைவி பெருந்துன்பத்தைக் கொண்டவளாய்த் தவிப்பாள் அன்றோ? வழியில் கொடிய விலங்குகளால் உயிரிழந் தானோ? என அறியாது மனமுறிந்து துன்பப்படுவாளே! இத்தகைய துன்பம் நிகழாமல் இருக்கவேண்டும் என்று எண்ணியவனாய்த் தவறாமல் வருபவன் செயலே, தலைவிக்குத் துன்பம் தருவதாகவும், அதனை மிகுவிப்ப தாகவும் இருக்கின்றது! ஆனால் இதனை அவன் எப்படி அறிவான்? என்னே, வாழ்க்கை செல்லும் வகை!

இப்பாடலில் கூறப்படும் கதை, தோழி மதியுடம் பட்ட நாளன்று, காலைமுதல் மாலைவரை நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஒன்றுகூடவிடாமல் விவரிக் கின்றது. இக்கதை 'உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்' என்றதனோடு முடிவு பெறுகின்றது! எனினும் ஆசிரியர் தம் பாடலை முடித்திருக்கவில்லை. தொடர்ந்து ஒரு நீண்ட முடிவுரையை அமைத்திருக்கின்றார். இம்முடிவுரை இருபகுதிகளாய்ப் பிரிந்து இயங்குகின்றது. இரவுக் குறியில் வரும் தலைவன் ஒருநாள்கூடத் தலைவியைக் காண முடியாமல், இடையீடுகள் காரணமாய், வாளாதிரும்ப நேர்ந்துவிட்டது என்பதனைத் தெரிவிக்கும் பகுதி முதலிலும், அவன் வரும் வழியில் அவனுக்கு நேரக்கூடிய இன்னல்களை எண்ணித் தலைவி வருந்திய பகுதி பின்னரும் பொருந்தியிருக்கின்றன. இவை யிரண்டும், இப்பாடலின் கதை நிகழ்ச்சிகளுடைய இயல்பான விளைவுகளேயாம்! எனினும், அவை இப்பாடலில் சேர்த்துக் கூறியிருக்க வேண்டியவையல்ல!

இரவுக் குறியின் இடையீடுகளையும், வழியின் ஏதங்களையும் எடுத்துக் கூறுபவள் தோழியே! ஆனால் அவள் இவ்விவரங்களைத் தலைவனுக்குக் கூறுவதே

வழக்கம்; அதுவே மரபு. இவற்றை அவள் தலைவனுக்குத் தெரிவிப்பதன் பயனாய், அவனை விரைவில் மணம் புரிந்து கொள்ளத் தூண்டலாம். இவ்வாறு தலைவனிடம் கூற வேண்டிய செய்திகளை இப்பாடலில் தோழி தன் அன்னையிடம் தெரிவித்திருப்பது ஏன்?

இத்தோழிக்குத் தமிழ் இலக்கிய மரபு தெரியாது போலும்! இதனை இயற்றிய கபிலருக்குக்கூட அம்மரபு மறந்துபோயிருக்கக்கூடுமா? வேற்று மொழியில் வல்லவனுக்கு நம்மொழி மரபின் மாண்பினைப் புலப்படுத்தப் பாடிய பாடலிலேயே, ஆசிரியர் மரபு பிறழச் செய்திகளைப் புகுத்தியிருப்பதனால், அவர் விரும்பியே, இவ்விவரங்களைத் தோழியைச் செவிலிக்குக் கூறவைத்திருக்கின்றார் என்பது விளங்குகின்றது! இதற்குத் தக்க காரணம் இருக்கவேண்டும்! அது நமக்குப் புலனாகவும் வேண்டும்! இல்லையேல் இப்பாடல், மரபுகளைப் போற்றாதது எனக் கருதிவிடுவோம் அன்றோ?

ஆசிரியர் இப்பாடலைப் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவிக்கப் பாடினாரன்றோ? அறத்தொடு நிற்றலை மட்டும் கூறிமுடிப்பின், அப்பொழுது களவொழுக்கத்தை முற்றிலும் உணர்த்த முடியாதே! எனவே ஆசிரியர் தெளிவகப்படுத்தல், இரவுக் குறியின் இடையீடுகளையும் ஏதங்களையும் உரைத்தல் முதலிய செய்திகளை, எடுத்துக் கொண்ட துறைக்கு அயலானவையே யெனினும் களவொழுக்கத்தை முடியக் கூற இன்றியமையாதவை என்ற காரணத்தால், இப்பாடலில் உடன் கூறியிருக்கின்றார் என்று விளக்கம் காட்டலாம்! ஆனால் இது உண்மையான விளக்கம் ஆகாது ; ஏற்றுக்கொள்ளக் கூடியதும் அன்று ! எனினும்

இவ்விளக்கத்தை வற்புறுத்துவது போலவே, இப்பாடலின் இறுதியில் உள்ள இரண்டாம் வெண்பா அமைந்திருக்கின்றது!

ஆற்றல்சால் கேள்வி யறம்பொருள் இன்பத்தைப்
போற்றிப் புனைந்த பொருளிற்றே—தேற்ற
மறையோர் மணமெட்டின் ஐந்தா மணத்திற்
குறையாக் குறிஞ்சிக் குணம்.

இவ்வெண்பா, தோழி கூறிய கதை மூன்றன் பகுதி கூறலாக அமைந்திருக்கின்றது என்பதனைக் குறிப்பிடுகின்றது. மூன்றன் பகுதி கூறும் உரிமை தலைவனுடையதேயன்றித் தோழியின் செயலாகாது! எனவே இவ்விளக்கம் ஏற்றுக் கொள்ளக் கூடியதன்று. மேலும் இப்பாடலைக் கேட்டவன் ஆரிய அரசன்; அவன் கந்தருவ மணத்தைப் பற்றி நன்கு தெரிந்தவனாய் இருக்கவேண்டுமே! அக்காரணம் பற்றியே இக்களவு மணம் கந்தருவத்தை ஒத்தது என எளிதாக அவன் தெரிந்துகொண்டிருக்க வேண்டுமே! இல்லையேல், அவனுடைய புலமையைப்பற்றி நாம் என்ன நினைப்போம்! அவனைச் சிறந்த புலவன் என்று ஏற்றுக் கொண்டவராய்க் கபிலர் இப்பாடலைப் பாடியிருக்கின்றாரே! அவர், 'களவு கந்தருவத்தின் குறைந்தது அன்று' என்ற பேருண்மையைப் புலப்படுத்தவா இந்நீண்ட பாடலை இயற்றியிருப்பார்? அவர் பெருமையின் எல்லை அவ்வளவேதானோ?

தன்னை அடுத்த ஆரிய அரசனுக்குக் களவொழுக்கத்தை விவரிக்கக் கபிலர் இப்பாடலை இயற்றவில்லை எனின் அவருடைய நோக்கம் என்ன? இப்பாடல் களவொழுக்கத்தை விவரிப்பதனையே பொருளாகக் கொண்டிருப்பது ஏன்? கபிலருடைய நோக்கம் ஆரிய அரசன் ஐயத்தைக் களைவதே! அவ்வரசனுக்குக் கந்தருவ மணத்தைப் பற்றி நன்கு தெரியும். அது தன்னைப் போன்ற அரசர்க்கே யுரியதாக வடமொழி வழக்கு கருதுகின்றது. ஆனால் தமிழ்இலக்கிய மரபோ அம்மணத்தை எல்லார்க்கும்

பொருந்துவதாகவும் சிறப்புடையதாகவும் பாராட்டுகின்றது. இது ஏன் என்று அறிய முற்பட்டே பிரகத்தன் கபிலரை அணுகி வேண்டினன்!

உலகில், எந்நாட்டிலும். இருவகை மணவினைகளே இருக்கக் கூடும். கொடுப்பக்கொள்வது பெரும்பான்மை வழக்கமாய், என்றும் எக்காலத்தும் இருந்திருக்கின்றது. எனினும், தாமே எதிர்ப்பட்டுக் கூடுவதனையும் பல சமுதாயங்கள் இயல்புடையதாகக் கருதின; கருதி வருகின்றன. இவற்றுள் பெருவழக்காய் உள்ள 'கொடுப்பக் கொள்வது' பெற்றோர் கற்பித்தபடி கணவனும், மனைவியும் வாழ்க்கை நடத்துவதேயாம்! இவ்வாழ்க்கையில், துன்பம் நேர்ந்தால், அதற்குத் தம் பெற்றோரைப் பொறுப்பாளிகளாகக் கருதி, கணவனும் மனைவியும் அத்துன்பத்தைப் பொறுத்துக்கொள்வர்; இதனோடு இத்தகைய துன்பம் நேராத வண்ணம் இருக்க வழிவகைகளைத் தேடுவர்! எனவே இம் மணமுறை காதலரை வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தச் செய்வதனோடு, அதனைக் கடந்துசெல்லவும் தூண்டுவதாய் இருக்கின்றது. ஆணும் பெண்ணும் கணவனும், மனைவியுமாய்க் கூடியிருப்பது வெறும்வாழ்க்கை ஒப்பந்தமாகாது, அது அவர்களுடைய ஆன்மத்துறை வளர்ச்சிக்குப் பயன்படவேண்டும் என்ற நோக்கத்துடன், 'கொடுப்பக் கொள்ளும்' மண முறை வகுக்கப் பெற்றிருக்கின்றது. இப் பெரும்பயனைக் களவொழுக்கம் பயக்குமா என்று அறிய விரும்பினன் ஆரிய அரசன் பிரகத்தன்!

ஒரு காளையும், காரிகையும் பாலதாணையால்—ஊழ்வினையன்று; பருவத்தூண்டுதல்—ஒன்று கூடிவாழ முற்படுவது தம் இன்பத்தை விரும்பியதாகுமே யல்லாமல், வேறு எந்நோக்கத்தையும் கருதியதாக இருப்பதற்கில்லை. 'கொடுப்பின் நன்குடைமையும், குடிநிரலுடைமையும், வண்ணமும் துணையும் பொரீஇ எண்ணாது துணிந்த' மணம் இது என்றே இப்பாட்டிலும் தோழி கூறியிருக்கின்

ருள். தம்முடைய முதற்காட்சியன்று, இளம் காதலர் உயர்ந்த எண்ணங்களை உடையவராய் இருப்பர் என்று எவரால் உறுதி கூறக்கூடும்? பருவத் தூண்டுதலால் தம்மைப் பிணைத்துக்கொள்ள உறுதி பூண்ட இருவர், பின்னர்த் தம் தொடர்பு அறுமல் பாதுகாத்துக் கொள்வரா? அதனல் பயன் விளையுமா? இந்த ஐயங்களை வடமொழிப் புலவர் எவராலும் களையமுடியாது! எனவே, பிரகத்தன் கபிலரை நாடி இவற்றைக் களைந்தருளுமாறு கேட்டான்!

கந்தருவ மணத்தை அரசர்க்கே யுரியதாகக் கருதும் மரபினையுடைய வடமொழி வல்லாரைக் கேட்பின், அவர்கள் அது சிறுவரவிற்றுதலான், நற்பயனைப்பயக்கும் என்று கூறுவதற்கில்லை எனவே கூறுவர். மேலும் அது அரசர்க்கு விதிக்கப்பெற்ற தன்று, வழுவமைதியாகக் கொள்ளப்படுவதேயாம்! எனவே அம் மணமுறையை, கொடுப்பக் கொள்ளும் முறைக்கு ஒத்ததாக எப்படிக் கருதலாம் என்றே அவர்கள் எண்ணுவர்! இம்மணமுறையை, எல்லார்க்கும் ஒத்ததாகவும், சிறப்புடையதாகவும் கருதும் தமிழ் வழக்கு தோன்றியது ஏன்? இம்மணம் பயனற்றதேயெனின், வழுவமைதியேயாம் எனின், தமிழ் இலக்கியம் இதனைப் பாராட்டியிருக்குமா? ஆரிய அரசனுடைய இக்கருத்துக்களை அறிந்தே, அவன் ஐயங்களைக் களையவே, கபிலர் இப்பாடலை இயற்றினர். இவ்வொழுக்கம் பயனுடையது என நிலைநாட்டவே, அவர் புலனெறிவழக்கம் போற்றும் மரபின் எல்லையையும் கடந்து சென்றிருக்கின்றார்!

நம் இலக்கணம் வகுத்துக்கூறும் மரபும், புலனெறி வழக்கும், களவொழுக்கத்தை விவரித்துக்கூற எழுந்தனவேயல்லாமல். பிரகத்தனுக்குத் தோன்றிய ஐயத்தினைப் போல், அதனுடைய பயனை வற்புறுத்திக் காட்டத் தோன்றியவையல்ல. பயன்களை எடுத்துக்காட்டுவதனைக் காட்டிலும், அவற்றைப் படிப்பவரை உணர்ந்துகொள்ள

வைப்பதே, சிறந்த முறையில் அவற்றை வற்புறுத்துவ தாகும்! ஏனெனில் அனுபவ வாயிலாய்த் தாமே உணர்ந்து கொள்ளும் அறிவே பயன்படுமேயல்லாமல், பிறர்வாயி லாய்க் கேட்டறிந்தவை பயன்படா? ஆயின் கல்விகற்ப தும், கேட்டறிவதும் பயனற்றவையா? இல்லை, இல்லை. இவை இரண்டும் நாம் நல்ல அனுபவங்களைப்பெற, நம்மைச் சிறந்த முறையில் ஒழுகச்செய்யும் நன்மையைப் பயப்பனவாகையால், இவை பெரும் பயன் உடையனவே யாம்! இல்லையேல், ஒவ்வொருவரும் எல்லாவற்றையும் தாமே தம் அனுபவத்தால் கண்டு அறியக்கூடுமா? பலரும் கண்ட உண்மையை தாமும் காணமுயல்வது அறிவாகா தன்றோ?

களவொழுக்கத்தை விவரிக்கும் முறைகளை வகுத் துக் காட்டவே புலனெறி வழக்கம் தோன்றியதேனும், அதனை வகுத்தவர், வாழ்க்கையின் பயனில் கருத்துச் செலுத்தாதவர் ஆகார்! 'என்பயக்குமோ இது கற்க எனின், வீடுபேறு பயக்கும் என்பது' என்ற இறையனார் அகப்பொருள் உரையாசிரியர்கூற்றுப் பொருளற்றதன்று. அவரே மேல், இக்களவியல், எவ்வாறு நாற்பொருளையும் பயக்கும் என விரித்துரைத்திருக்கின்றார் ஒழுக்கத்தை விவரிக்க உதவும் முறையில் வகுக்கப்பெற்ற புலனெறி வழக்கத்தைப் பயனை வற்புறுத்தும் நோக்கத்தோடு ஒரு பாடலைப் பாடிய கபிலர், தம் நோக்கம் நன்கு நிறைவேற மாற்றியமைத்துக் கொள்ளும் உரிமையுடையவரேயன்றோ! இப்பாடலின்கண் ஆசிரியர் புலனெறி வழக்கத்துக்குப் புறம்பாகக் கூறியிருப்பன, களவொழுக்கத்தின் பயனை வற்புறுத்த இன்றியமையாது வேண்டுவனவாம்! இல்லை யேல், மரபைப் பிறருக்கு வகுத்துக் காட்டக்கூடிய பெரி யார் தாமே அவற்றைக் கடந்து சென்றிருப்பாரா?

இப்பாடல் தலைவனும் தலைவியும் சூழ்ந்துகொண்டு தோழியை மதியுடம்படுத்தியதனை, அவள் தன் அன்னைக்

குத் தெரிவித்தது போல் அமைந்திருக்கின்றது. தலைவியி னிடத்துப் பெரும் பற்று உடையவளாகையாலும், தான் கூறுவனவற்றைச் செவிலியை ஏற்றுக்கொள்ளச் செய் யும் நோக்கம் உடையவளாக இருந்தமையாலும், தோழி தான் நேரிற் கண்டறிந்தவற்றை அவை நிகழ்ந்த வண்ணமே கூறாமல், சற்று மாற்றியும் திருத்தியும் கூறி இருக்கின்றாள்! அவள் விவரித்திருக்கும் தலைவன் வருகை, மதியுடம் படுத்திய அன்று நிகழ்ந்தது; அதனைத் தோழி தலைவனும் தலைவியும் முதன் முதலாகக் கண்ட காட்சி யினைப் போல் செவிலிக்குத் தோன்றும்படித் திரித்துச் சித்திரித்துக் காட்டுகின்றாள்! உண்மையின் இவ்வேறு பட்ட தோற்றத்தை வற்புறுத்த, யானையின் வருகையை யும், அதனைத் தலைவன் துரத்திவிட்டுத் தம்மைக் காத்த தனையும் கற்பித்துக் கூறியிருக்கின்றாள்.

ஒரு தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டுக் கண்டு, ஒருவரிடத்து மற்றவர் உழுவலன்பு கொண்டவ ராக இருத்தலை அறிந்து கூடுவது முதனிலைக் காட்சி, அல்லது இயற்கைப் புணர்ச்சி என்று கூறப்படும். இவ் வொழுக்கத்தின் இறுதியில், தலைவியைத் தன் தோழி யோடும், ஆயத்தாரோடும் போய்ச் சேர்ந்துகொள்ள விடுக் கும் தலைவன், அவள் அச்சத்தை அகற்றத் தெளிவகப் படுத்துவது வழக்கம். 'நின்னைப் பிரியேன்; பிரியின் ஆவி தரியேன்' என்று கூறுவதே இத்தெளிவகப் படுத்தலின் வாய்பாடாகும் என்பதனைப் பல பாடல்களால் அறிகின் றோம். இவ்வாறே இப்பாட்டிலும் தெளிவகப்படுத்தல் கூறப்பெறுகின்றது. மதியுடம்படுத்தவந்த தலைவன் வருகை, அவனும் தலைவியும் கண்ட முதனிலைக் காட்சியே யாம் என்று செவிலியைத் திரியக்கொள்ளச் செய்யவேண்டு மாகையால் தோழி, தெளிவகப்படுத்தல் நிகழ்ந்தது என்று கூறியிருக்கின்றாள். இதனை அவள் இருகூறுகளாக்கிக் கூறியிருப்பது அவளுடைய திறனுக்குத் தக்கசான்றாகும்!

யானை வந்ததும், அதனைக் கண்டு இவர்கள் நடுங்கி அவனை அணுகிச் சென்றதும், இவர்கள் அச்சத்தைப் போக்கவும், தன் ஆண்மை வெளிப்படவும் அவன் யானையை அம்பால் எய்து புண்படுத்திப் போக்கியதும் தோழி படைத்துக் கூறியவை. இவற்றைப் படைத்துக் கூறியன என்று நாம் கண்டு கொண்டதனைப் போல, செவிலி தெரிந்துகொண்டிருக்கமாட்டாளா? உறுதியாகத் தெரிந்து கொண்டிருப்பாள்! அப்படி அவள் தெரிந்து கொள்ளும் திறனுடையவளாக இராமல் இருப்பினும், தோழி அவளை இவை படைத்துக்கூறியனவே என்று உணரும்படிச் செய்ததனையேனும் அவள் தெரிந்து கொண்டிருப்பாள்!

தலைவன் வருகை, தலைவியும் தலைவனும் முதன் முறையாக ஒருவரை மற்றவர் கண்ட முதனிலைக் காட்சி என்று திரித்துக் கூறிவருபவள், யானை புறங்கொடுத்தவுடனே, நடுக்கம் நீங்காமல் இருந்த தலைவியை 'மாசறு சுடர் நுதல் நீவி அஞ்சல் ஓம்பு! நின் அணி நலம் காக்கு' எனத் தெளிவகப் படுத்தியதாகக் கூறியிருக்கின்றாள்! முதன் முறையாகக் கண்ட தலைவியை, தன் கேள்விக்கு விடைகூறவும் வெட்கிய தலைவியை, அவள் யானையைக் கண்டு நடுங்கிய நடுக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு, தோழியின் எதிரில், அவளுடைய சுடர் நுதலை நீவித்தெளிவிக்க எத்தலைவன் முன் வந்திருப்பான்? இச்செயல், இவ்வாசிரியர் குறிஞ்சிக்கலியின் முதற் பாடலில் விவரித்துள்ள தலைவன் செயலுக்கு நேர் எதிரானதாக அமைந்திருப்பதனைக் காண்கின்றோம்!

தலைவனுடைய இச்செயல் பொருத்தம் உடையதே! ஏனெனில் அவன் தலைவியை அறியாதவன் அல்லன். தோழியின் எதிரில் அவன் அவளைக் கண்டது இதுவே முதன் முறையாம். தான் அவளை நன்கு அறிவான் என்பதனைப் புலப்படுத்தவே அவன் இப்பொழுது இருவரும்

சேர இருக்கும்பொழுது வந்தான். தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள, அவள் எதிரிலேயே, தலைவியின் நுதலை நீவிக் காட்டினான்! எனவே, இவ்விவரத்தைக் கொண்டே, செவிலி தன் மகள் தனக்குக் கூறுவது அவளுடைய கற்பனைச் சித்திரம் என்று எளிதில் கண்டு கொள்ளலாம்!

இவ்வாறு உண்மையில் நிகழாதவற்றை நிகழ்ந்தன போலத் தோன்றும்படிக் கூறி, அவற்றைப் படைத்துக் கூறியன என்றும் தெளிவிப்பதனால் பெறும்பயன் என்ன? தோழி கூறுவனவற்றைச் செவிலி ஏற்றுக்கொள்வது, நற்றாய் ஏற்றுக்கொள்வதற்கும், அவள் ஏற்றுக்கொள்வது தந்தையும் தன்னையரும் ஏற்றுக்கொள்வதற்கும் ஒக்கும் என்பது புலனெறி வழக்கம். எனினும், தோழி செய்ததனைப் போலவே, செவிலியும் தாயும் தந்தையும் தன்னையர்க்கு அவர்கள் ஏற்றுக்கொள்ளும் முறையில் நிகழ்ந்தவற்றைக் கூற வேண்டியவர்களாய் இருக்கின்றனர். இதனை,

> அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
> என்னையர்க்கு உய்த்து உரைத்தாள் யாய்.
>
> கலி : 39:20,1

என இவரே குறிப்பிட்டிருப்பதனைக் கொண்டு தெளியலாம்.

தோழி, செவிலி, நற்றாய் இம்மூவரும் தலைவியின் இனத்தைச் சேர்ந்தவர். ஆனால் தந்தை தன்னையர், சுற்றத்தார் இவர்கள் இவரினும் வேறுபட்டவர்; ஆண்கள். தலைவியின் வாழ்க்கையில் உண்மையாக நிகழ்ந்தவை அனைத்தையும், ஓரினத்தவரே யெனினும், அவளுடைய தாய்களே யெனினும், செவிலியும் நற்றாயும் தெரிந்து கொள்ளும் உரிமையுடையவர் ஆகமாட்டார். இங்ஙனமிருக்கத் தந்தையும் தன்னையரும் அவற்றைத் தெரிந்து கொள்ள எவ்வகையில் உரிமையுடையவர் ஆவார்? தோழி

தான் கூறுவனவற்றைச் செவிலியை ஏற்றுக்கொள்ளச் செய்ய முயன்றதனோடு நில்லாமல், அவள் தந்தை தன்னையர்க்கு இவற்றை எப்படி எடுத்துக் கூறவேண்டும் என்றும் வழிகூறுபவளாய் விளங்குகின்றாள். இதனை முன்னரே கண்டோம்!

இங்குத் தோழி படைத்துக் கூறிய கதை நிகழ்ச்சிகள் செவிலியை ஒப்பச் செய்யக் கூறியவையல்ல; தந்தை தன்னையரை ஒப்பச் செய்யச் செவிலி கூறவேண்டிய கதையேயாம்! எனவே இதன் உண்மையைச் செவிலி உணருமாறு செய்யவேண்டியது இன்றியமையாததன்றோ? இல்லையேல் தோழி படைத்துக் கூறியவற்றைச் செவிலி உண்மையாக ஏற்றுக்கொள்ள வேண்டிவரும்! அப்பொழுது பொய்யை மெய்யெனக் கொள்ளுமாறு செய்தலில் வல்ல தோழிக்கு, பொய்யா நாவிற் கபிலர் துணை புரிந்தார் என்று கொள்ளவேண்டியும் வரும்!

செவிலி தந்தை தன்னையருக்கு எவ்வாறு எடுத்துச் சொல்லவேண்டும் என்று தோழி விளக்கியது உண்மையைப்போல் தோன்றுகின்றது. ஆனால் உண்மையைப்புலப்படுத்திக்கொண்டு, அதனைத்தான் ஏற்றுக் கொண்ட பின்னரன்றோ செவிலி நற்றாய்க்கும் தந்தை தன்னையர்க்கும் கதைகூற முற்படுவாள்? எனவே, உண்மையாக நிகழ்ந்த தெளிவகப்படுத்தலையும் தோழி செவிலி நனியுணரக் கூறியிருக்கின்றாள்!

மலரத் திறந்த வாயில் பலருண
பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி யடிசில்
வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண்(டு) எஞ்சிய மிச்சில் பெருந்தகை!
நின்னொடு உண்டலும் புரைவது; என்றாங்கு
அறம் புணையாகத் தேற்றி... 203-8

மலையின் மீது விளங்கிய முருகனைத் தொழுது தலைவன் சூள் செய்த பின்னரே, தலைவி அவனைத் தன் காதலனாக ஏற்றுக்கொண்டாள் என்பது தோழியின் வாதம்! இது

வும் தலைவன் இயல்பாய்க் கூறிய தெளிவகப்படுத்தலா காதே! ஆம்! எனினும் இது தலைவனைத் தன் பொறுப்பை யுணர்ந்து தலைவி செய்விக்கச் செய்த சூழுறவேயாம்! அவ ளைப் பொறுத்தமட்டில் இது தேவையில்லை! இருந்தும், இனிக் களவொழுக்கம் தொடர்ந்து நிகழத் தோழியின் துணை வேண்டுமன்றோ? அவளை அவன் மனநிலையை அறியவைக்க, தலைவி இவ்வாறு வஞ்சினம் உரைக்கச் செய்தாள்.

இச் செயலைத் தலைவனைச் செய்யும்படித் தூண்டிய தலைவியின் மனநிலையை நம்மைக் காட்டிலும் பெண்களே நன்கு தெரிந்துகொள்ளக் கூடும். ஏனெனில் பெண்ணி னத்துக்கு இயல்பாய் அமைந்துள்ள தற்காப்புணர்ச்சியின் வெளிப்பாடே இது! தலைவி, தலைவனை முற்றிலும் நம் பியே தன் காதலனாக ஏற்றுக்கொண்டாள் எனினும், அவன் உறுதியை, அவ்வப்பொழுது தெரிந்துகொள்ளுவது அவளுக்கு மகிழ்ச்சி அளிப்பதாகும். தன் விருப்பத்தையே அவள், இப்பொழுது தோழியைக் காட்டி நிறைவேற்றிக் கொண்டாள்! 'உள்ளத் தன்மை உள்ளினன் கொண்டு' அவன் இவ்வாறு வஞ்சினம் உரைத்ததாகத் தோழி கூறி யிருப்பது, அவன் இவளிடத்துக் கொண்டுள்ள பற்றின் எல்லையைக் குறிப்பிடுவதனோடு, நமக்கும் பெண்ணினத் தின் இயல்பைப் புலப்படுத்திக் காட்டுகின்றது!

தோழியை அறத்தொடு நிற்கச் செய்ததும், அவளைத் தான் தாயையே இவ்வாறு செய் என்று பணிக்கும் அள வுக்குத் துணிவுகொள்ளச் செய்ததும், செவிலியைப் பின் னர் தந்தை தன்னையர்க்கு எடுத்துரைக்கச் செய்யப்போவ தும், அவள் கூறுவனற்றை அவர்களை ஏற்றுக்கொள்ளச் செய்விப்பதும் இவ்வஞ்சினமே யாம்! இதுவே கள வொழுக்கத்தின் சிறந்த பயனை, பிரகத்தன் அறிய விழைந்த பொருளைப் புலப்படுத்துகின்றது! இவ்வஞ் சினத்தின் வாயிலாய்த் தலைவன் மூன்றன் பகுதி கூறி,

அதன்வழி நடப்பதே இல்லறம் எனத் தெளிவுறுத்திப் பின்னர் அதனைத் தெப்பமாகக் கொண்டு நாம் வாழ்க்கையின் பயனைப் பெறுவோம் என்று தலைவிக்கு உறுதியளித்திருக்கின்றான்! அவள் உள்ளத் தன்மையை உள்ளி இவ்வாறு அவன் உரைத்தான் என்றமையால், இப்பாட்டின் தலைவி, தலைவன், தோழி முதலியோர்க்கும் கபிலருக்கும், பிரகத்தனுக்கும் இருந்ததுபோல் வீடுபெறுதலில் விருப்பம் மிகவுண்டு என்று விளங்கித் தோன்றுகின்றது!

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கும் முயன்று இயற்றிப் பெற வேண்டுவன என்பது எல்லோருக்கும் ஏற்றதுவே; எனினும் அவற்றை வற்புறுத்தும் முறையிலேயே இலக்கிய மரபுகள் அமைந்திருக்கவேண்டும் என்ற நோக்கம் வடநூல் வழக்காகக் காணப்படுகின்றது. இலக்கியத்தை அகம், புறம் என இருபிரிவுகளாகப் பிரித்து மரபுகளை வகுத்தவருக்கும் இந்நாற் பொருளும் ஏற்றவையே யென்றும், அவற்றை நிறைவேற்றுவதே வாழ்க்கையின் நோக்கமாக இருக்கவேண்டும் என்றும் கபிலர் இப் பாட்டால் தெளிவுறுத்தியிருக்கின்றார். வள்ளுவப் பெருந்தகை தம் நூலை முப்பாலாக இயங்க வைத்திருப்பதும் இக்கருத்துப்பற்றியே யாம்! இந்நான்கனுள் முதல் மூன்றும் வாழ்க்கையின் பண்பு என்றும், நான்காவது பயன் என்றும் கூறுவர். இப்பெரும் பயனைப் பெறும் வாழ்க்கையை எப்படி நடத்துவது என்றே வள்ளுவர் வழிகாட்டியிருக்கின்றார். ஆயின், அவர் காமத்துப் பாலையும் பாடி யிருக்கின்றாரே!

வீடு என்பது மனத்தைத் தூய்தாக்கிப் பற்றறச் செய்து கொள்ளுதலே யன்றி எதனையும் துறந்துவிடுதல் அன்று. இல்லறத்தையோ, பொருள்களையோ துறத்தல் வீடாகாது; ஆனால் அவற்றின்மேற் செல்லும் பற்றினைத் துறத்தல் வீடு எனப்படும்! இதனை இடைக்காலத்தவர்

திரியக் கொண்டமையாலேயே, இக்காலத்தில் 'வீடு' என்ற சொல்லைச் சொல்லவும், கேட்கவும் அனைவரும் அஞ்சுகின்றனர். அதனை விரும்பி, ஊன்றி முயல்பவர் எவரும் பெறலாம் என்றே எல்லா நூல்களும் கூறுகின்றன; அதனைப் பெற்றவராக நாம் கருதும் பெரியோர்களும் இக்கருத்தை வழிமொழிகின்றனர்.

துறவு என்பது பற்றுகளைத் துறத்தலாகுமே யல்லாமல்,பொருள்களைத் துறத்தலாகாது. அது மனத்தைப் பற்றியதே யல்லாமல், இயற்கையையோ, பொருள் களையோ பற்றியதன்று. கபிலர் தம் பாடலில் வரும் தலைவனும் தலைவியும் வீடு பெறுதலை நோக்கமாகக் கொண்டு மணம்புரிந்து கொண்டனர் என்று கூறி யிருப்பது வியக்கத் தக்கதாகாது! ஏனெனில் வீடு பேற்றுக்கு இல்லறம் பொருந்தாது என்று எவரும் எக்காலத்தும் கூறியிருக்கவில்லை. கருதியிருக்கவும்இல்லை. மாறுக, வீடுபேற்றினைப் பெற்ற பின்னர், மணஞ் செய்து கொண்டவர் பலர் உண்டு.

வேதகாலத்து இருடியர் அனைவரும் இல்லறத்தில் ஈடுபட்டவராகவே இருந்தனர். ஈச உபநிடதம் வீடு பெற்று இவ்வுலகில் பலநாள் வாழவேண்டும் என்ற விருப்பத்தை மேற்கொள்ளுமாறு நம்மைத் தூண்டு கின்றது. பிற்காலத்தும் எத்துணை நாயன்மார், ஆழ்வார்கள் இல்லறத்தில் இருந்தவராய்த் தம் வாணாளைக் கழித்திருக் கின்றனர். இவற்றால் மெய்யுணர்வு பெற்று வாழும் வாழ்க்கையே சிறந்தது என்றும், அதனை விரும்புபவர் முயன்று பெறலாம் என்றும், அந்நோக்கத்தோடுவாழ முற்படுவது அதனை யடையச் செய்ய உதவும் என்றும் அறிகின்றோம். இல்லறத்தில் ஈடுபட்டு வாழமுடியாத இளங்கோவடிகள், தாம் துறக்க நேர்ந்தபொழுது, சமண சமயத்தைப் பற்றியது, நம் சமயத்தவர் துறவறத்தை ஓர் ஒழுக்கமாகக் கொள்ளாமையாலேயாம்!

மெய்யுணர்வுபெற அது இன்றியமையாது வேண்டுவதன் ருகையால் நம் சமயம் துறவுக்கோலம் கொள்ளுதலை விதிக்கவில்லை!

பாலதாணையால் இளைஞராய் உள்ளவர் தாமே எதிர்ப்பட்டு ஒருவரை யொருவர் விரும்பிக் கள வொழுக் கத்தை மேற்கொள்ளுகின்றார்களேனும், அதுவும் அவர் களை வாழ்க்கையின் பயனை விரும்பச் செய்ய உதவி யளிக்கும் என்பதனைக் கபிலர் இப்பாட்டில் தெளிவகப் படுத்திய பகுதியின் வாயிலாகத் தெரிவித்திருக்கின்றார். இதனோடு இப்பாடல் கூறவந்த கதை முடிந்துவிட்டது. செவிலி தந்தை தன்னையரைத் தலைவி தேர்ந்து கொண்டவ னுக்கே அவளை மணஞ் செய்து கொடுக்க ஒப்பச் செய்து விடுவாள்! ஆனால் கபிலர், பாடலை முடிக்கக் காணோமே! மேலும் இருபத்து ஐந்து அடிகளைப் பாடி யிருக்கின்றாரே! அவர் இம்முடிவுரையைப் பாடியிராவிட்டால், தலைவன் உரைத்த வஞ்சினத்தால் வெளிப்படும் அவன் விருப்பம் — வீடு பெறுதல் — வாளா கூறப்பட்டதே யென்றும், களவொழுக்கம் அது நிறைவேற வாய்ப்பளிக்காது என்றும் நம்மைக் கருதவைத்துவிடும்! இந்நிலை தோன்றாமல் இருக்கவே கபிலர் இம்முடிவுரையையும் பாடி யிருக்கின்றார்!

தலைவன் தன்னை நாள்தோறும் காணவருவது, அவனுக்குத் தன்னிடமுள்ள அன்பின் ஆழத்தைப் புலப் படுத்துவதேனும், தலைவி அவன் வருகையை எண்ணி வருத்தமே அடைகின்றாள். அவன் வரும் வழியில் அவன் உயிருக்கு ஊறுபயக்கக் கூடிய விலங்குகள் நடமாடும். அவன் நாள்தோறும் பதினாறு வகைப்பட்ட இன்னல் களைத் தனக்காகக் கடந்து வருகின்றான் என்பதனை எண்ணிப்பார்க்கும்பொழுது அவள் கண்களினின்றும் நீர் உதிர்கின்றது. இது இடைவிட்டு விழுவதாகத் தோழி கூறியிருக்கின்றாள். இதனால் தன் காதலன்

இவ்வின்னல்களைக் கண்டு அஞ்சுபவன் அல்லன், அவற்ருல் தனக்கு ஊறு நேராதபடி பார்த்துக் கொள்ளும் வல்லமையுடையவன் என்ற நம்பிக்கை அவள் மனத்தே நிறைந்திருந்தமை வெளிப்படுகின்றது. இவ்விவரம் இப் பாடலின் முடிவுரையின் பிற்பகுதியாகும். இதனை அவள் அவன் வருகையால் பயனில்லை என்பதனை எண்ணி அழுவதனை நம்மை நன்கு உணர்ந்துகொள்ள வைக்கவே, ஆசிரியர் குறிப்பிட்டிருக்கின்ருர்.

இரவுக் குறியில் இவர்கள் இருவரையும் ஒருநாள் கூடச் சந்திக்கமுடியாமல் செய்தவை நான்குவகை இடையூறுகளேயாம். இவற்ருல் இவ்விருவருக்கும் எத்தகைய ஊறும் நேராது எனினும் இவை தோற்று விக்கும் கண்ணீர் இடையருது ஆற்ருெழுக்குப்போலப் பெருகிவருகின்றது. எனத் தோழி தெரிவித்திருக் கின்ருள். இதன் இடையருப் பெருக்கை நாம் ஊன்றி உணர்ந்துகொள்ளவே, ஆசிரியர் இடைவிட்டுத் தெறிக்கும் கண்ணீரைத் தோற்றுவிக்கும் இன்னல்களையும் விவரித் திருக்கின்ருர். மேலும் இடையீடுகள், இன்னல்கள் ஆகிய இரண்டும் பயக்கும் துன்பநிலைகளை உடன் கூறியிருக்கின்ருர். உயிருக்கு ஊறு விளைவிக்கக்கூடிய இன்னல்களுக்கு வருந்துவதனைக் காட்டிலும், தலைவி இன்பத்துக்குத் தடையாக இருந்த இடையூறுகளைக் கருதி மிகவும் வருந்துவதனை நாம் குறியாகக் கொள்ள வேண்டும். இதனுல் உயிரை இழப்பதனைக் காட்டிலும் பெருந் துன்பத்தை விளைவிக்கக் கூடியது இன்பமற்ற வாழ்க்கை என்ற உண்மை வெளிப்படுகின்றது!

இன்பத்தை விரும்பாதவர் எவரும் இருக்கமுடியாது! ஆனுல் எது இன்பம் என்பதனைப் பற்றிய கருத்து ஒவ் வொருவர் மனநிலைக்கும் தக்கபடி மாறுபாடுடையதாகக் காணப்படுகின்றது. உலகத்துப் பொருள்களால் இன்பம் கிடைக்கும், வாழ்க்கையைத் துய்ப்பதால் இன்பம்

உண்டு என்று எண்ணுவது உண்மையேயெனில், அளவு மிக்க பொருள்களைப் பெற்றிருப்பவர் அவற்றிற் கேற்ப, அளவுகடந்த இன்பத்தைத் துய்ப்பவராய் இருக்க வேண்டும் அன்றோ? ஆனால் நாம் அனுபவத்தில் அறிந்து கொள்ளுவது அதற்கு நேர் மாறாக இருக்கின்றதே! பகற் காலத்தே இன்பத்தை வேண்டிப் பொருள்களைத் தேடி யலையும் நாம், இரவில் நம் உடலையும் மறந்து தூங்கும் பொழுது துய்க்கும் இன்பத்தை வேறு எப்பொருள் பயக் கும்? இதனை நாம் கருதிப் பார்க்காமலேலேலே வாழ் நாளை வீணாக்கிவிடுகின்றோம். அறிவுடையார் பொருள்களாலும், அவற்றை அடைந்திருப்பதாலும் இன்பம் உண்டு என் பதனை ஏற்றுக்கொள்ளுவது இல்லை! மாறாக அவற்றின் மீதுள்ள பற்று நீங்கி யிருப்பதே இன்பம் பெறும் வழியா கும் என்று கருதுகின்றனர்! இப்பற்றற்ற நிலை பயக்கும் இன்பம் மாறுபாடுகள் ஒன்றுமின்றி நிலைபெற்ற தன்மை யுடையது என்பதனை எல்லோரும் ஏற்றுக்கொள்கின் றனர். பற்றறுதலும் வீடுபேறும் உடனிகழ்ச்சிகளாம்.

இப்பாட்டில் காதலர் இருவரும், இரவுக்குறியில் தோழியின் உதவியால் ஒருவரை மற்றவர் கண்டு மகிழ லாம் என்று எண்ணியே, களவொழுக்கத்தை மேற் கொள்ளத் துணிந்து தம் திருமணத்தைத் தள்ளிவைத்துக் கொண்டனர். இவ்வின்பத்தைப் பெறவே தலைவன் நாள் தவறாமல் வந்து சென்றான். எனினும் அவனுக்கு அவ்வூர் 'கொன்னூராக'த் தோன்றிற்று. அவளுக்கு அவன்வருகை 'மாயவரவாக' மாறிவிட்டது. இருவரும் திருமணத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கி விட்டனர்! ஆனால் அதனைப் பற்றிக் கலந்து பேசி முடிவு செய்வதற்குக்கூட அவர் களுக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. இதுவே வாழ்க்கை நமக்கு உணர்த்தும் அறிவுரை என்பது கபிலர் கருத்து. இவ்விருவரும் சந்தித்து மகிழாததற்குத் தக்க காரணத் தைக் காட்டக் கூடுமா?

ஊர்க்காவலர் தம்தொழிலைச் செய்யவே அங்கும் இங்கும் அலைந்தவண்ணம் இருந்தனர். இக்காதலரை ஒருவரையொருவர் காணவொட்டாமற் செய்யவேண்டும் என்ற நோக்கம் அவர்களுக்கு இல்லை. வேற்று மனிதரைக் கண்டு குரைப்பது நாயின் இயல்பு. எனவே தலைவன் வரவைக் கண்டு குரைத்த நாயும் இவர்களிடம் வேறுபாடுடையதன்று. செவிலி துயிலெழுந்தது அவளுடைய இயல்பே யல்லாமல், தலைவியை வெளிக்கிளம்பவொட்டாமல் இருக்கச் செய்பவன்று. உலகனைத்தையும் உவகைக் கடலில் ஆழ்த்தத் தோன்றிய நிலவு, இவர்களுக்குத் துன்பத்தைத் தந்தது எனின், அது அதன் குற்றமாகுமா? உலகத்துப் பொருள்கள் தத்தம் இயற்கைப்படி இயங்குவது இவர்களுக்குத் துன்பம் தரும் எனின், அதனால், இவர்கள் உலகைத் தமக்குப் பகையாகக் கருதிவிடலாமா? 'தீதும் நன்றும் பிறர் தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன' என்பதனையே உலக இயற்கை நம்மை உணர்ந்து கொள்ளச் செய்கின்றது.

காவலர் போக்கு வரவும், நாய் குரைத்தலும், நிலவு வெளிப்படலும் உலகின் நன்மைக்காகவே யல்லாமல், மக்களைத் துன்புறுத்த நிகழ்வனவல்ல. எனினும் இவர்கள் இருவரும் உலகத்தின் இயக்கத்தால் துன்பப்படுவதாகத் தோழி கூறி இருக்கின்றாள். இவர்களுக்காக நிலவு வெளிப்படாமல் இருப்பின் உலகு என்னாவது? காவலர் வேலைமடியின், ஊர்க்காவல் என்னாவது? எனவே அறிவுடையவர் உலகின் போக்குக்கு ஒப்பத் தம் ஒழுக்கத்தை மாற்றியமைத்துக் கொண்டு வாழ முற்படவேண்டும். தமக்கு இன்பம் வேண்டின் உலகை நம்புவதிற் பயனில்லை என்று உணரவேண்டும்!

பொருள்களிடத்தில் உள்ள பற்று நீங்கின், அவற்றின் சேர்க்கையோ, பிரிவோ துன்பத்தைப் பயக்காதன்றோ? இக்காதலருக்கும் இவ்விடையீடுகள் பற்று

நீங்கி வாழ்வது இன்பம் தரும் என்று உணர்த்துகின்றன். பற்றை நீக்கியவர் மனம் சமநிலை பெறும் அதனால் பொருள்கள் சேருவதனால் மகிழ்ச்சியோ, பிரிவதனால் வருத்தமோ அவர்களுக்குத் தோன்றாது. இவ்வாறு சமநிலை பெற்றமனம் இன்பம் பயக்கும் என்பதனை எவரும் தத்தம் அனுபவத்தாலேயே எளிதில் உணர்ந்துகொள்ளலாம்.

உலகமோ, அதன் பொருள்களோ நமக்கு இன்பமோ அல்லது துன்பமோ பயக்கத் தோன்றியவையல்ல; ஆனால் அவற்றால் இவ்விரண்டனுள் ஒன்றினைப் பெறுவது நம்முடைய செயலின்—சிறப்பாக மனத்தின்—விளைவேயாம்! அவைகளை நம்மை இடையறாத இன்பத்தைத் துய்க்கும் படிச் செய்யும் முறையில் பயன்படுத்திக்கொள்ள முனைவது நம் ஆற்றலுக்குட்பட்டது! நாம் அவற்றைத்துறக்க வேண்டுவதில்லை; தாமாகக் கிடைத்தவைதரும் நன்மையை அடைந்து மகிழலாம்; கிடைக்காதனவற்றைக் குறித்து வருந்தாமல் இருப்பது நம்மால் கூடுவதே என்பதனை ஒருவரும் மறுக்கமுடியாது! இம்முறையில் நம் வாழ்க்கையை நடத்துவது பற்றற்ற. சமநிலை பெற்ற தூயவாழ்க்கையை நிகழ்த்துவதாக ஆகும், இத்தூயவாழ்க்கை உறுதியாக நம்மை இடையறா இன்பத்தைப் பெறவைக்கும்.

கபிலர் எம்முறையில் நாம் இயங்குவது நம்மை இடையறா இன்பத்தைப் பெறத் தகுதியுடையவர்களாகச் செய்யும் என்பதனைத் தலைவனும் தலைவியும் கொண்டிருந்த நோக்கத்தையும், அவர்கள் அதனை நிறைவேற்றுவதற்கு அவர்களுடைய வாழ்க்கை எவ்வாறு வாய்ப்பளித்தது என்பதனையும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். தாம் தம் விருப்பப்படி இன்பமடைய முயல்வது துன்பத்தையே பயக்கும் என்பதனை அத்தலைவன் தலைவியர் உணர்ந்து கொண்டமையால், இனி அவர்கள் தம் மனத்தை மாசு படுத்தும் பற்றினைப் போக்க முற்படுவர் என்பதனைக் கபிலர் பிரகத்தனுக்கு உணர்த்தினர். அவர்கள் தாம் தம்

அனுபவத்தில் தெரிந்துகொண்ட அறிவைப் பயன்படுத்தி வெற்றி கண்டார்களா என்பதனைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டுவதில்லை; ஏனெனில் அது அவர்களைப் பொறுத்தது. நாமும் பிரகத்தனும் அறியவேண்டியது, களவொழுக்கம் மெய்யுணர்வுபெற வாய்ப்பளிக்குமா என்பதுவேயாம்.

களவொழுக்கம் வீடுபேற்றினைப் பெறவேண்டும் என்ற விருப்பத்தைத் தூண்டும் வாய்ப்புகளைப் பெற்று நடப்பதுவே என்பதனை ஆசிரியர் இரவுக்குறியின் இடையீடுகளைக் குறிப்பிட்டு நமக்கு உணர்த்தியிருக்கின்றார். இப்பாட்டின் தலைவன், தனக்கு இன்பத்தைத்தரும் என்று எண்ணியே தலைவியை இரவுக்குறியில் தன்னைக் காண வேண்டினன். அவளை அவன் கட்டுப்படுத்தி ஒப்பச்செய்ய முடிந்தது. ஆனால் வேண்டிய பயனை அவன் பெறவில்லை. எனினும், நாள் தவறாமல் அவன் 'அன்றையன்ன விருப்பத்தோடு' வந்து செல்வதாகத் தோழி கூறியிருக்கின்றாள். மேலும் 'இளமையின் இகந்தன்றுமிலன்; வளமையின் தன்னிலை திர்ந்தன்றுமிலன்' என்றும் அவள் கூறியிருக்கின்றாள். இவற்றால் அவன் மெய்யுணர்வு பெறத் தகுதியுடையவன் என்பதனைக் கபிலர் நமக்குக் காட்டிவிட்டார். அவன் மனம் சமநிலை யுற்றதாக இயங்குகின்றதன்றோ?

கபிலருடைய பெருமைக்கும், பிரகத்தனுடைய புலமைக்கும், நம்முடைய தகுதிக்கும் ஏற்ற வகையில், இப்பாடலில் கதை முடிந்த பின்னரும் இரவுக்குறியின் இடையீடுகளும், இன்னல்களும் விவரிக்கப்பெற்றிருப்பது பொருந்தும் எனக் கண்டோம்! ஆனால் அவற்றைத் தோழி செவிலிக்குக் கூறியது அவ்விருவர் நிலைக்கும், தமிழிலக்கிய மரபுவழாமல், தகுதியுடையதாகுமா? ஆகும் என்ற காரணத்தால்தான் ஆசிரியர் அவற்றையும் தோழி கூறி விவரித்ததாகப் பாடியிருக்கின்றார். தலைவி தகுதி

மிக்க காதலனைத் தேர்ந்தெடுத்துக்கொண்டாள் என்பதனைச் செவிலி அவன் உரைத்த வஞ்சினத்தாலும், தோழியின் உறுதிமொழிகளாலும் உணர்ந்து கொண்டாள். அவள் மனத்தில் ஓர் ஐயம் இயல்பாக எழுந்தது. தானும் தாய் தந்தையரும், தன்னையரும் சுற்றத்தாரும் எதிர்த்துக் கூறமுடியாத தகுதி சிறந்த காதலனைப் பெற்ற தலைவி, ஏன் அயலார் மணம் பேச வருவதற்கு முன், அவனை அவனுடைய சுற்றத்தாரை மணம்பேச வரச்செய்திருக்கக் கூடாது? செவிலியின் மனத்தே இந்த ஐயம் தோன்றியதை, அவள் முகக்குறிப்பால் உணர்ந்துகொண்டே, தோழி இரவுக் குறியின் இடையீடுகளையும், இன்னல்களையும் விவரிக்கத் தொடங்கினாள்!

'உண்துறை நிறுத்துப் பெயர்ந்தனன்' என்று கதையை முடித்தபின், இம்முடிவுரையை அதனோடு ஒட்டி வைத்திருப்பதனைப்போல் தோன்றும்படி ஆசிரியர் இதனை அமைத்திருப்பதனைக் கொண்டே, தோழி முதலில் இவற்றைக் கூறக்கருதியிருந்திருக்கவில்லையென்றும், இவற்றையும் கூற அவளைத் தூண்டியது செவிலியின் நிலையே என்றும் உய்த்துணர்ந்துகொள்ளலாம். தமிழிலக்கிய மரபிற்கு ஏற்ப, தலைவனும் தலைவியும் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் களவொழுக்கத்தை மேற்கொள்ளுவது இயல்பு; அதன் இறுதியில், தலைவன் மணம் பேசவந்தால் தாய் தந்தையர் மறுமல் மகட்கொடை நேர்வர் என்ற உறுதி ஏற்பட்ட பின்னரே, தலைவி அவனை அவ்வழியை மேற்கொள்ளத் தூண்டுவாள். அவன் வேண்டுகோளுக்குத் தன் தாய் தந்தையர் ஒப்பமாட்டார்கள் என்று தெரிந்தால் அவள் அவனுடன் அவன் ஊருக்குச் சென்றுவிடுவாள். இப்பாட்டின் தலைவி தன்னுடைய தாய் தந்தையர் மறுக்கவே முடியாத தகுதி சிறந்த தலைவனைப் பெற்றுவிட்டாள். அவள் ஏன் தன் தலைவனை மணம்பேசத் தன் பெற்றோரை அனுப்பிவைக்கத் தூண்டியிருக்கக் கூடாது என்பதே செவிலியின் ஐயம்!

தலைவனை, தன் தாய் தந்தையரிடம் மணம்பேசப் பெரியோர்களை அனுப்பிவைக்குமாறு தூண்டுவது தலைவியின் பொறுப்பு. தலைவன் களவொழுக்கத்தை நீட்டித்துக் கொண்டிருக்க விழைவது அவனுடைய இயல்பு. இவற்றை நன்குணர்ந்தே தலைவி தன் பொறுப்பை நிறைவேற்ற வில்லை எனச் செவிலி எண்ணினாள். அவள் கருத்தை உணர்ந்து கொண்ட தோழி, தலைவி அவளுடைய பொறுப்பை நிறைவேற்ற, நாள் தவறாமல் வரும் தலைவனை ஒரு நாள்கூடக் காணமுடியாமற் போய்விட்டது என்பதனைச்செவிலி மனங்கொள்ளுமாறு செய்யவே,இரவுக்குறியில் நேர்ந்த இடையீடுகளை விவரித்திருக்கின்றாள். உடன் வழியின் இன்னல்களைக் கருதித் தலைவி துன்பமுற்றதனையும் விவரித்திருப்பது செவிலி அவள் செயலின்மைக்குப் பெரிதும் இரங்கவேண்டும் என்றேயாம்.

கபிலர், தமிழ் மரபின் மாண்பு வெளிப்படும்படிப் பாடிய நெடும்பாட்டில், அம் மரபுக்குப் புறம்பானவற்றையும் புகுத்திப் பாடியிருப்பது பொருத்தமுடையதேயாம்! அவருடைய இப்புதுமையை நம் வழுவமைதிகளாகக் கருதுவது அவருக்கோ நமக்கோ பெருமை தருவதாகாது! அவர் காட்டியதே மரபு எனக்கொள்ளுவதே அறிவுடைமைக்கு அழகாகும்! அவர் பரந்திசை நிற்க, அன்று பிரகத்தன் பெற்றபாடலை நாம் அறிந்துகொள்ளும் வாய்ப்பும் தகுதியும் பெற்றிருப்பது நம்முடைய தவப்பயனா? அல்லது அப்பெரியார் திருவருளா?

# 7. ஓவிய மாலை

கலை வல்லான் தீட்டிய சித்திரத்தை ஓவியம் எனக் கூறுகின்றோம். கவிஞன் தீட்டிய சொற்களாலாகிய சித்திரத்தையும் ஓவியம் எனக் கூறுவது வழக்கம். இலக்கிய ஓவியத்தின் வரிவடிவத்தை நாமே நம் மனத்தின்கண் தோற்றுவித்துக் கொள்ளுகின்றோம். அதனுடைய பொருட் செறிவே, அவ்வோவியத்தை எழிலுடையதாக விளங்கச்செய்யும் வண்ணமாகும். ஓவியக் கலைஞன் தான் தீட்டிய சித்திரத்தின் தகுதிக்கு ஏற்ப, பல வண்ணங்களையோ, அல்லது ஒரே வண்ணத்தையோ பயன் படுத்துவான். அவ்வாறே கவிஞனும் தான் தீட்டும் ஓவியங்களை ஒரே பொருளைப் பயப்பனவாகவோ, பல பொருள்களைப் பயக்கும் ஆற்றல் பெற்றவையாகவோ சித்திரிப்பான். அவற்றின் வரி வடிவங்களைப்போலவே, பொருள் வளத்தினையும் நாமே புலப்படுத்திக்கொள்ள வேண்டும்.

நம் இலக்கணம் குறிப்பிடும் உள்ளுறைகள் அனைத்தும் ஓவியங்களாம். ஆனால் ஓவியங்கள் அனைத்தும் நம் இலக்கணம் குறிப்பிடும் உள்ளுறைகள் ஆகமாட்டா! எனினும் அவையும் பிறபொருள்களைப் பயக்கும் காரணத்தால் உள்ளுறை என்ற பொதுப் பெயரால் வழங்கக் கூடியவையேயாம். தொல்காப்பியம் கூறும் உள்ளுறை உவமங்களும், ஏனையுவமமும் உவமத்தை உள்ளிட்டவைகளாக இருத்தல் வேண்டும். இறைச்சி, அல்லது உடனுறை என்பது இயற்கை வருணனையை ஆதாரமாகக் கொண்டிருப்பதேனும், உவமம்போல் விரித்துரைக்கும் முறையில் இயன்றிருக்கும். மேலை நாட்டார் ஓவியம் எனக் குறிப்பிடுவது இவையனைத்தையும் உள்ளிட்டது.

ஒரு சொல்லோ, சொற்றொடரோ, அல்லது உவமையோ தான் விளக்கவந்ததனோடு, அதற்குத் தொடர்புடைய பிறசெய்திகளையும் புலப்படுத்தும் ஆற்றல் உடையதாயின் அது ஓவியம் என்று கருதப்படும். அது கட்புலனாகக் கூடிய ஒரு வரிவடிவத்தை அல்லது சித்திரத்தை நம் மனத்தே தோற்றுவிப்பதாக இருத்தல் வேண்டும் என்ற வரையறை யில்லை. எப்புலனைக் கவரும் பெற்றியுடைய தேனும் அதனை ஓவியம் என்று ஏற்றுக்கொள்ளலாம். மேனாட்டார் இவ்வோவியங்களை இருவகைகளாகப்பிரித்து வழங்குகின்றனர். ஆசிரியன் கருதியிருந்த ஒரு பொருளினை மட்டும் புலப்படுத்தும் ஓவியங்கள் குறியீட்டு ஓவியங்கள் (Symbolic images) என வழங்கப்பெறும். பிற வற்றை, பொருட்செறிவு மிக்கவற்றை, பலபொருள்களைப் பயக்கும் ஆற்றலுடையனவற்றை ஓவியம் என்ற பொதுப் பெயராலேயே வழங்குவர்.

இவ்வோவியங்கள் கவிஞரால் சூழ்ந்து தீட்டப் பெற்றனவா, அல்லது அவரையும் அறியாமல் இவை அமைந்து கிடப்பனவா என்பதனைப்பற்றி மேனாட்டாரும், தொல் காப்பியரும் நேர் எதிரான கருத்துடையவராய்க் காணப் படுகின்றனர்.

> உள்ளுறுத் திதனோ(டு) ஒத்துப்பொருள் முடிகென
> உள்ளுறுத் திறுவதை உள்ளுறை உவமம்.
>
> தொல். பொருள்: 47

இதனால் இவை கவிஞரால் சூழ்ந்து புகுத்தப்பெற்றவையே யாம் என்று தொல்காப்பியம் துணிவுடன் கூறக்காண்கின் றோம்! மேல் நாட்டவர் முயற்சியின்றியே கவிஞன் மனத் தில் உருவாகி வெளிப்படுவனவே ஓவியங்கள் என்று கருதுகின்றனர். இவர்கள் கருத்துக்கு ஆதரவு அளிக்கக் கூடிய ஒன்றிரண்டு உள்ளுறைகளைச் சங்க இலக்கியம் பெற்றிருக்கின்றது. எனினும் முற்றிலும் கவிஞன் கருதி யிராமலேயே ஓவியங்கள் உருப்பெறும் என்ற கருத்து ஏற்றுக்கொள்ளக்கூடியதன்று. இது உண்மையேயெனின்

அப்பொழுது அக்கவிஞனை உயிருள்ள ஒருவாயிலாகக் கருதவேண்டுமேயல்லாமல், புலமை செறிந்த அறிஞனாகக் கொள்ளுவதற்கில்லை.

மேனாட்டுக் கலைவல்லார் ஏற்க முடியாத ஒரு கருத்தைக் கொண்டவர் என்று கருதிவிடக்கூடாது! அவர்கள் கவிஞன் தன் தனித்தன்மையை (Personality) மறந்த நிலையில், தன் மனத்தின் அடித்தளத்தில் கண்ட உண்மைகளை ஓவியங்களாக வெளிப்படுத்துகின்றான் என்கின்றனர். மனிதன் தன் மனத்தில் மேலெழுந்த எண்ணங்களை உடையவனாகவே வாழ்கின்றான். அவனுடைய ஆழங் காணமாட்டாத அடிமனம் அவனுக்கே யுரியதன்று! அது அனைத்துலக மனத்தின் (Universal mind or Cosmic mind) அல்லது தெய்விக மனத்தின் கூறுபாடாகும்! எனவே அங்குத் தோற்றிய உண்மைகள், அம்மனிதனுக்கு மட்டுமே உரியன என்பதனை எப்படி ஏற்பது? அவை மக்கட் சமுதாயம் அனைத்துக்கும் பொதுவான உண்மைகளாம். அதனால், அவற்றைக்கண்டு வெளிப்படுத்தும் கவிஞனை அவ்வுண்மைகளைப் படைத்தவனாகக் கருதுவதற்கில்லை, வாயிலாகவே கொள்ளவேண்டும் என்பதுவே மேனாட்டார் கருத்து. இதனால் கவிஞனுக்கு எவ்விதக் குறைவும் ஏற்படுவதில்லை. அவன் ஒரு தேவதூதனாகக் (Prophet) கருதப்படும் பெருமையையடைகின்றான்! இருந்தும், அவன் தன் அடிமனத்தே கண்டவற்றை, உலகியலின் நிலைக்குக் கொணர்ந்தே விவரிக்கின்றான்; ஆகையால், ஓவியங்களைக் கவிஞன் சூழ்ந்து இயற்றுகின்றான் என்று கருதுவதே பொருத்தமுடையது!

சங்கப் பாடல்கள் அளவாற் சிறியன; மேலும் அவைகளுள் ஒவ்வொரு பாடலும் வாழ்க்கையில் நிகழக்கூடிய ஒரு நிகழ்ச்சியை விளக்குவதனையே பொருளாகக் கொண்டிருப்பது. எனவே இப்பாடல்கள் ஒன்று அல்லது இரண்டு உவமைகளுக்குமேல் கையாளக்கூடிய பெருமை

யுடையனவாய் இல்லை. குறிஞ்சிப்பாட்டு அளவால் நீண்டது; மேலும் இது ஒரு தலைவன், தலைவியருடைய வாழ்க்கையின் சிறந்த பகுதியை முற்றிலும் விவரிப்பதனோடு, அவர்களுடைய வாழ்க்கையின் பண்பையும், பயனையும் புலப்படுத்துகின்றது. எனவே இதனை ஒரு வாழ்க்கையை முற்றிலும் கூறும் பாடல் எனக் கொள்ளுவதும் பொருந்தும். இதனால், இது தான் தீட்டும் பலவேறு நிகழ்ச்சிகளை விவரிக்கப் பல உள்ளுறைகளைக் கொண்டதாய் அமைந்திருக்கின்றது.

கபிலர், தமிழ்மொழியில், முதன் முதலாகக் காரண காரியத் தொடர்பு அறுமல் ஒரு சிறுகதையை முற்றிலும் சித்திரித்திருக்கின்றார்; எனவே அவர் தம் பாடலின் அமைப்பு முறையில் அதுவரை எவரும் கையாளாத ஒரு புதுமையைப் புகுத்தியிருக்கின்றார். இவ்வாறே, அவர் தம் உள்ளுறைகளையும், கதை நிகழ்ச்சிகளைப் போலவே கோவைப் படுத்திக் காட்டியுள்ளார். அவருடைய உள்ளுறைகளைக்கொண்டே நாம், இப்பாட்டில் பொதிந்துள்ள கதை நிகழ்ச்சிகள் அனைத்தையும் தெரிந்துகொண்டு விடலாம்; அக்கதையை உருவாக்கி விடலாம். ஓவியங்களை இம்முறையில் தொடர்பு படுத்திக் காட்டிய பெருமை கபிலரையே சேரும். இவருக்குப்பின் வந்த இளங்கோவடிகள் இவர் கையாண்ட உத்தியை மிகத் திறம்படக் கையாண்டுள்ளார். கபிலருடைய ஓவியங்கள் மாலைபோல் அமைகின்றன. ஒரு காப்பியக்கதையின் நிகழ்ச்சிகளை இசைவு (Unity) இணைத்தலைப் போலவே, இவருடைய ஓவியங்களும் இணைக்கப்பெற்றனவாய் விளங்குகின்றன.

நெல்கொள் நெடுவெதிர்க்கு அணந்த யானை
முத்தார் மருப்பின் இறங்குகை கடுப்பத்
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் இன்குரல்.

கபிலர் கூறும் கதையின் தொடக்கப் பகுதி இதுவாகும். இதற்குமுன் கூறப்பெற்றவை இக்கதை ஏன் தோன்றிற்று என்று விளக்கும் முன்னுரைப் பகுதியாம். கதை

யின் தொடக்கத்திலேயே கபிலர் ஓர் ஓவியத்தைத் தீட்டியுள்ளார். இது கதையின் போக்கைப் புலப்படுத்தும் ஆற்றல் உடையதாக அமைகின்றது! இது ஒரு குறியீட்டு ஓவியம்.

மூங்கில் நெல்லைத் தின்ன விரும்பிற்று ஒரு யானை. அதனை வளைக்கத் தன் துதிக்கையை அது உயரே தூக்கிற்று; ஆனால் எளிதில் வளையக்கூடிய மேற்பகுதியை எட்டக்கூடவில்லை. மூங்கில் நெல்லின் மீது சென்ற அதன் விருப்பம் இதனால் தணிந்துவிடவில்லை. எனவே யானை தன் முயற்சியைக் கை விடவில்லை. அம் மூங்கிலை எப்படி வளைக்கலாம் என்று வழிவகைகளை ஆராயத் தொடங்கிற்று. துதிக்கையைத் தூக்கியபடியே வைத்துக்கொண்டிருப்பது நோவைத் தோற்றுவிக்கும். அந்நிலையில் மனம் எப்படித் தொழில் புரியும்? துதிக்கையைத் தாழ்த்துவதாயின், தலையும் தாழும். அப்பொழுது அம் மூங்கிலை அடிமுதல் நுனிவரை காண முடியாதே! நோவும் தோன்றாமல், தலையைத் தூக்கிய நிலையிலும் வைத்திருக்க யானை ஓர் உத்தியைக் கையாண்டது. தன்னுடைய தந்தத்தின் மீது தூக்கிய துதிக்கையைத் தங்கவைத்துக்கொண்டது. அதனுடைய மருப்பின் மீது தங்கி வளைந்து தோன்றும் துதிக்கை, அருகில் பால் ஏறி வளைந்து காணப்படும் தினைக்கதிருக்கு ஏற்ற உவமையாக இருக்கவே, கபிலர் இச்சித்திரத்தைத் தீட்டியுள்ளார். தினைக்கதிருக்கு யானையின் கையை உவமையாகக் கையாண்டுள்ள புலவர் பலர். கபிலரே இருபாடல்களில் (குறுந் : 198, நற் :376) இவ்வுவமையைக் கையாண்டுள்ளார்.

கபிலர் யானையின் துதிக்கையைத் தினையின் கதிருக்கு உவமையாகக் காட்டியுள்ள மற்றையிரண்டிடங்களிலும், துதிக்கையின் திரட்சியையே பொருளகக் கொண்டுள்ளார். மருப்பின்மீது உயரத்தூக்கிய துதிக்கையை, கண்ணுடி இலைகளுக்குமேல் வெளிப்பட்டுத் தோன்றும் கதிருக்கு உவமையாக மதுரைப்பூவண்டநாகன் வேட்டனாரால் கருதப்பட்

டுள்ளது. எனவே இவ்விடங்களில் தினைக்கதிருக்கு யானையின் துதிக்கை திரட்சி என்னும் பண்பினை அடிப்படையாகக் கொண்டு உவமமாக வந்திருக்கின்றது. ஆனால் இப்பாடலில் இறங்குகை உவமம்; எனவே அது வளைந்து தோன்றும் தோற்றமே இங்குப் பொருளாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. இவ்வளைந்த தோற்றத்துக்குக் காரணம், யானை எண்ணத் தொடங்கியதேயாம். எனவே இவ்வுவமை யானையின் முயற்சி நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையை நம்மைக் கருதிப் பார்க்கத் தூண்டுகின்றது.

தினைக் கதிரினை உவமைகாட்டி விளக்கியிருக்க வேண்டாம். அதனை எல்லாரும் எளிதில் தெரிந்துகொள்ளலாம் அன்றோ? எனினும், பிறபுலவர்களும் கையாண்டிருப்பதால் இவரும் இவ்வுவமையைக் கையாண்டுள்ளார். அதனைப் பொருட் செறிவுடையதாகச் செய்துள்ளார். ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கும் யானையின் சித்திரத்தை இவர் தீட்டிக் காட்டியிருப்பதேன்? வளைந்த துதிக்கை, கதிர்கள் பால் ஏறி வளைந்திருப்பதனை உணர்த்துவதனோடு, யானை ஆழ்ந்த சிந்தனையுடன் மூங்கிலை வளைக்க வழி தேடுகின்றது என்பதனையும் நமக்கு உடன் உணர்த்துகின்றது! இவ் யானை தன் முயற்சியில் வெற்றிபெறும் என்ற எண்ணமும் நமக்கு எழுகின்றது! இல்லையெனின், இதன் நிலையைக் கண்டு, இது வெற்றி பெறட்டும் என்று நம்மை விரும்பச் செய்கின்றது இச் சித்திரம்! யானையின் சித்திரத்தைத் தீட்டி ஆசிரியர் நம்மை அதனிடம் தொடர்புகொள்ளச் செய்துவிட்டிருக்கின்றார்!

இந்த யானை உணவைத் தேடும் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றது. அம்மலையில் எங்கு நோக்கினும் தினைப் புனங்கள் நிறைந்து காணப்படுகின்றன. அப்புனங்களில் கதிர்கள் முற்றியிருக்கின்றன என்றும் இவ்வுவமையாலேயே விளங்கிக்கொள்ளுகின்றோம். அங்ஙனமிருக்க, அத் தினைக்கதிர்களை உண்டு தன் வயிற்றினை நிரப்பிக்கொள்ள

விரும்பாமல், இவ்யானே அதன் வாயையும் நிரப்பப் போதாத மூங்கில் நெல்லைப் பெற ஏங்கிக்கொண்டிருப்பது எத்தகைய பேதைமை! அதுதான் ஐயறிவுடையது என்ருலும், அது வெற்றி பெறவேண்டும் என்று விரும்பிய நாம் எத்தகைய பெரும்பேதைகள்! கபிலர் நம்மை எந்நிலேக்குக் கொண்டு சென்றுவிட்டார்!

யானைக்கு மூங்கில் நெல் விருப்பமான உணவு என்பது மட்டும் இவ்யானையின் செயலுக்குக் காரணம் ஆகாது! மக்கள் பாடுபட்டுப் பயிரிட்டுள்ள தினைக் கதிர்களைக் கவர்ந்துண்ணுவது, வயிற்றை நிரப்புமேனும் பழியொடு படரும் செயல் என்று இவ்யானை எண்ணிற்று! 'எலி முயன்றனையர் ஆக' இருக்க இவ்யானே விரும்பவில்லைபோலும்! யானைக்குச் சோழன் நல்லுருத்திரன் பாட்டு தெரியுமா? கபிலருக்குத் தெரிந்திருக்கவேண்டுமன்ருே? அவர் ஏவும் யானே உயர்ந்த பண்புடையதாக இருப்பதில் வியப்பென்ன? நமக்கும் அச் சோழனுடைய பாடல் தெரியுமாகையால், நாமும் யானையின் வெற்றியை விரும்பினேம்! ஐயறிவே யுடையனவேனும், விலங்குகளிடத்தும் நற்பண்புகள் சில வெளிப்படுவனவற்றைக் காணலாம். இங்கு இப்பெரிய யானைக்கு ஆசிரியர் கற்பிக்கும் பண்பு ஒரு புதுமையன்று வேறு புலவரும் இவ்வாறு கருதியிருக்கக் காண்கின்ருேம்!

**முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி**
**நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற**
**குறியிறைப் புதல்வரொடு மறுவந்து ஓடி**
**முன்னுள் இனியது ஆகிப் பின்னுள்**
**அவர்தினை மேய்தந் தாங்குப்**
**பகையா கின்றவர் நகைவிளை யாட்டே!**

(குறுந் : 394)

இச்சின்னஞ்சிறு யானைக் கன்று பெரிய யானைகளோடு சென்று தனக்கு உணவு தேடிக்கொள்ளும் பருவத்தை எய்தியிருக்கவில்லை. எனவே இதனை விட்டுவிட்டுத் தாய் யானை உணவு தேடச் சென்றுவிட்டது. இதற்கும்

தான் முயன்றுண்ண வேண்டும் என்ற விருப்பம் தோன்றிற்று. தினையை உலர்த்திவிட்டுக் காவல் காத்திருந்த குறச்சிறுர்களைக் கண்டது. அவர்களிடம் சென்று, காயும் தினையைச் சுற்றிச்சுற்றி ஓடி அப்பிள்ளைகளுடன் விளையாடிற்று. பலமுறை சுற்றி ஓடியதால் களைத்துக் குறச்சிறுர் கண்ணுறங்கிய காலத்தில் இக்கன்று தினையைத் தின்றுவிட்டுச் சென்றது! இது தினையைக் களவாடித் தின்றது என்று எப்படிக் கூறலாம்? தன் உழைப்புக்குரிய ஊதியத்தை எடுத்துக்கொண்டது என்றே கொள்ளவேண்டும்!

யானைக் கன்று முயன்று தேடி உண்பதனை விரும்பும் ஒழுக்கத்தை உடையதாய் இருக்க, இப்பெரிய யானை அப்பண்பினை வெளிப்படுத்துவது வியப்புடையதாகுமோ? கதையின் தொடக்கத்தில் கபிலர் இத்தகைய பொருள் செறிந்த உவமையைக் கையாண்டிருக்கக் காரணமென்ன? கதையின் முதனிகழ்ச்சிக்கு முன்னர்ப் பயன்படுத்தப்பட்டுள்ள இவ்வுவமை, கதையின் போக்கை ஒருவாறு புலப்படுத்துவதாக இருத்தல் வேண்டும்! இப்பாடலைக் கபிலர் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் மரபின் மாண்பினைப் புலப்படுத்தப் பாடினுரன்ரூே? வேற்று நாட்டு மன்னனுக்குக் கூறியதாகையால், யானை ஒரு குறியீடாக, நம் நாட்டையும், அதன் சிறப்பையும் உணர்த்தும் ஆற்றலுடையதாக ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்!

அமெரிக்காவைக் கழுகாகவும், இங்கிலாந்து நாட்டினைச் சிங்கமாகவும், ரஷியாவைக் கரடியாகவும் உருவகப்படுத்திக் கூறும் வழக்கம் உண்டு. இவ்விலங்குகள் அவ்வந் நாடுகளை மட்டுமேயல்லாமல், மக்கள் பண்பினையும்உணர்த்தக்கூடிய குறியீடுகளாகக் கருதப்படுகின்றன. இத்தகைய வழக்கம் இன்று நேற்று ஏற்பட்டதன்று; தொன்று தொட்டு வருவதேயாம்! கபிலர், இவ்யானையின்

சித்திரத்தால் மலைநாட்டினையும், அந்நாட்டு மக்களின் மண முறையினையும் நமக்கு உணர்த்தியிருக்கின்றார். இஃது ஒரு குறியீட்டு ஓவியம்.

எளிதில் கைப்பற்றி உண்ணக்கூடிய முற்றிய தினைக் கதிர்கள் மலிந்து காணப்படும் சூழ்நிலையின் நடுவே, இந்த யானை மூங்கில் நெல்லைப்பெற முயல்வது வியப்புடைய செயலே! மூங்கில் எட்டி வளைக்க முடியாததாய் இருந்த தனைக் கண்டபின், யானை தன் முயற்சியைக் கைவிட்டு விடாமல், தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள எண்ணியது மேலும் வியக்கக் கூடியதேயன்றோ? மூங்கில் நெல் சுவைமிக்கது போலும். எளிதில் கிடைப்பவற்றினும், அரிதாக இருப்பவை சுவைமிக்கவைபோல் தோன்றுவது இயல்பே! கிடைத்த லருமையால், பொருள்களின் சுவை தன்னியல்பினும் மிக்குத் தோன்றுவதும் இயல்பே! அதனினும், பெரிதும் முயன்று பெறும் பொருள்களின் சுவை மேலும் மிக்கதாய்த் தோன்றுமன்றோ ? யானையின் முயற்சி பொருளுடையதே என்று புலப்படுகின்றது!

மலைநாட்டு இளைஞர் விரும்பி மேற்கொள்ளும் மண முறையின் போக்கையும் சிறப்பையும் இவ்வோவியம் புலப்படுத்துவதாய் இருக்கக் காண்கின்றோம்! தந்தையின் பாதுகாவலுக்கு உட்பட்ட பெண்ணை, அவள் தாய் தந்தையரைக் கேட்டு மணம்செய்து கொள்ளலாம்! ஆனால் இது இரந்து பெற்றதாக ஆகுமன்றோ? எனவே அந்நாட்டு இளைஞர் இம்முறையை விரும்பியிருக்கவில்லை. தாமாக முயன்று, தாம் விரும்பும் பெண்களைத் தம்மை விரும்ப வைத்து மணந்து கொள்ளுவதனையே அவ்விளைஞர் பெரிதும் விரும்பினர்! இவர்கள் செயல் எட்டும் அளவில் இல்லாத கழையை யானை முயன்று வளைத்துப் பயன் பெறுதலை ஒத்ததேயன்றோ? மூங்கில் தந்தையையும், அதனுள் இருக்கும் நெல், அவன் பாதுகாவலில் உள்ள மங்கையையும் குறிப்பிடுவன. இவ்விளைஞர் கன்னிப் பெண்களைத் தம்மை விரும்பவைத்து அவரைக் களவிற்

கூடி மகிழ்ந்தபின், தம் சுற்றத்தாரை மணம்பேச அனுப்புவது இரத்தலாகாது. ஏனெனில் பெண்ணின் தந்தையை மகட்கொடையை மறுக்கமுடியாத நிலையில் இருப்பவனாக, தன் இச்சைப்படி நடந்துகொள்ளும் வாய்ப்பை இழந்தவனாகச் செய்தாகிவிட்டது!

இத்தகைய களவு முறை அந்நாட்டு இளைஞர்களை ஆண்மை மிக்கவராகவும், தன்னம்பிக்கை யுடையவராகவும், திறனுடையவராகவும் செய்கின்றது! இத்துறையில் தாம் விரும்பியவண்ணம் வெற்றிபெற்ற காளையர் உளம் மகிழ்வர். பிற்காலத்தில் எண்ணிப் பார்த்தாலும், அவர்களுடைய இவ்விளம் பருவச்செயல் அவர்கள்தோள்களைப் பூரிக்கச் செய்யும்! இத்தொடக்க ஓவியத்தின் வாயிலாய்க் கபிலர் தாம் கூறப்போகும் கதையின் போக்கையும் முடிவையும் குறிப்பாய்ப் புலப்படுத்தியுள்ளார். தம் கதையை ஒரு குறியீட்டு ஓவியத்தால் தொடங்கியுள்ள இவ்வாசிரியர், அதனை மற்றொரு குறியீட்டு ஓவியத்தால் முடித்திருப்பது, அவர் இவ்வோவியங்களைச் சூழ்ந்து அமைத்திருக்கின்றார் என்பதற்குச் சான்று பகர்கின்றது!

**மாதர் வண்டொடு சுரும்புநயந் திருந்த**
**தாதவிழ் அலரித் தாசினைப் பிளந்து**
**தாறடு களிற்றின் வீறுபெற ஓச்சிக்**
**கல்லென் சுற்றக் கடுங்குரல் அவித்து.**

தலைவியையும் தோழியையும் தன்னுடைய ஏவலால் வளைத்துக்கொண்டு அகப்படுத்திக் கொடுத்த தன் நாய்களைத் தலைவன் தம் பொறுப்பினின்றும் விடுவித்ததனை விவரிக்கின்றது இப்பகுதி. வண்டும், சுரும்பும் விரும்பித் தங்கியிருந்த ஒரு பூஞ்சினையைச் செடியினின்றும் ஒடித்து எடுத்துக்கொண்டு, அதனைப் பாகனுடைய ஏவலை ஏற்றுக்கொள்ள மறுத்த யானை, தன் நோக்கத்தில் வெற்றி பெற்றதனைத் தன் துதிக்கையைத் தூக்கியாட்டித் தெரிவித்ததற்கு ஒப்ப

உயரத்தே தூக்கி, நாய்களின் குரைத்தலை அடக்கினான். இவ்விவரங்கள் கதையின் தொடக்க நிகழ்ச்சியையும், அதன் இயல்பான விளைவையும் புலப்படுத்துகின்றன.

தகப்பனுடைய பாதுகாவலில் இருப்பவள் தலைவி. அவளைத் தன்மீது கொண்ட விருப்பத்தால் அவள் தகப்பனுடைய பாதுகாவலைத் துறக்குமாறு செய்வதே தலைவனுடைய முதல்வேலை. இதனை நிறைவேற்றியவுடன், அவன் தன் நோக்கத்தில் வெற்றி பெற்றவனாகி விடுகின்றான். தான் விரும்பிய வண்ணம் மணமுடித்துக் கொள்ளுவான். இப்பகுதியில் தாசினை தலைவியையும், அதன்மீது விரும்பித் தங்கியிருந்த வண்டும் சுரும்பும் அவளிடத்து அளவற்ற பற்றுக்கொண்டிருந்த அன்னையையும் செவிலியையும், பூஞ்செடி தலைவியின் தகப்பனையும் குறிப்பிடுகின்றன. சினையை ஒடித்து எடுத்துக் கொண்டான் என்பதனால், அவன் அவளைத் தன் தகப்பன் பாதுகாவலிலிருந்து விடுவித்துத் தனக்குரியவளாகக் கொண்டுவிட்டான் என்று தெரிகின்றது. செடியிலிருந்து ஒடித்து எடுத்துக் கொள்ளப்பட்ட பின்னரும், அக்கிளையில் இருந்த வண்டும் சுரும்பும் போகவில்லை. தாயும், செவிலியுமே பின்னர்த் தலைவன் செய்த செயலைத் தந்தையும் பிறரும் ஏற்றுக்கொள்ளச் செய்பவர். எனவே அவர்கள் என்றும் தலைவியை நயந்தவராய் இருப்பவராகவே கொள்ளவேண்டும்.

பிளந்து எடுத்துக்கொண்ட பூங்கொம்பை நாய்களின் குரைத்தலை நிறுத்தத் தலைவன் தன் தலைக்கு உயரே தூக்கி ஆட்டினான். இது நாய்களுக்கு அவன் இட்ட கட்டளையை உணர்த்துகின்றது. இங்கு ஆசிரியர் மேலும் ஓர் உவமையைக் கூறித் தலைவனுடைய வெற்றியைக் குறிப்பிடுகின்றார். அவன் கொம்பைத் தன் தலைக்குமேல் தூக்கியது, தலைவியை அவன் எந்த நிலையில் வைத்திருப்பான் என்பதனைப் புலப்படுத்தும்! பாகன் யானையைத் தனக்கு இணங்கிச் செல்லும்படி வற்புறுத்துகின்றான்.

யானைக்கு அடங்கிச் செல்ல விருப்பமில்லை. அது அவன் தாற்றுக்கோலை எதிர்க்கிறது என்றது தன் விருப்பத்தை வற்புறுத்துகின்றது என்று பொருள்படும். வேறு வழி யில்லாமல் பாகன் விட்டுவிடவும், யானை தான் கொண்ட வெற்றியைத் துதிக்கையை உயர்த்தி ஆட்டுவதால் புலப் படுத்துகின்றது.

பெண்ணின் தகப்பன் தான் தேர்ந்தெடுப்பவனைத் தன் மகள் மணக்கவேண்டும் என்று விருப்புகிறான். அவ னால் தலைவனைக் கட்டுப்படுத்த முடியுமோ? தன் மக ளையே அவனால் கட்டுப்படுத்த முடியாதபடி அத்தலைவன் செய்துவிட்டானே! வேறுவழியின்றித் தகப்பன் தன் நிலையை உணர்ந்து, தன் மகள் விரும்பியவனுக்கே அவளை மணம் செய்து வைக்கின்றான். இவ்விவரங்களை இங்குக் கூறப்பெற்ற ஏனை யுவமம் குறிப்பிட்டு விவரிக்கின்றது. தலைவன் வெற்றிபெற்றான் என்பதனை யானை வெற்றி பெற்றது என்றதனால் அறிகின்றோம். இவ்வெற்றியால் தலைவியின் நிலை உயருகின்றது!

இவர்களுடைய திருமணம் நிகழ்வதற்குமுன், இவ் விருவருக்கும் உள்ள தொடர்பினைத் தெரிந்துகொண்டு விட்ட ஊர்ப் பெண்கள் வம்பு பேசி வந்தனர். ஆனால் மணம் நிகழ்ந்த பின், அவர்கள் வாயை மூடிக்கொள்ள நேர்ந்தது! நாயின் குரைத்தலைத் தலைவன் அடக்கியதா கக்கூறவந்த கபிலர் களவுமணத்தின் போக்கினையும் உடன் புலப்படுத்தி விட்டிருக்கின்றார். இஃது ஓர் உள்ளுறை உவமம். இங்கும் தலைவனை ஆசிரியர் ஓர் யானைக்கு ஒப் பிட்டு, மேல் ஓவியத்தோடு இது தொடர்புடையது என்று காட்டியுள்ளார்! அவர், சொல், பொருள் என்ற இரு வகையிலும் இம் முதலிரண்டு ஓவியங்களை இணைத்திருப் பது உணர்ந்து மகிழத்தக்கது! இவ்விரு ஓவியங்களும் இப்பாடலில் கூறப்படும் கதையின் போக்கைக் குறிப் பாய்ப் புலப்படுத்துவனவாக இருக்கின்றன!

இருவி வேய்ந்த குறுங்கால் குரம்பை
பிணையர் நோக்கின் மனையோள் மடுப்ப
தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
சேமம் மடிந்த பொழுதின், வாய்மடுத்து
இரும்புனம் நிழத்தலின் சிறுமை நோனது
அரவுறழ் அஞ்சிலை கொளீஇ நோய்மிக்கு
உரவுச்சின முன்பால் உடல்சினம் செருக்கி
கணைவிடு புடையூஉ கானம் கல்என
மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிர
கார்ப்பெயல் உருமின் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்தி
சினம்திகழ் கடாஅம் செருக்கி மரம்கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர.

இப்பகுதி ஓர் உள்ளுறை உவமத்தைக் கொண்டது. இதுவே இப்பாடலில் இருக்கும் மூன்றும் ஓவியம். இது இப்பாடலில் கூறப்படும் கதையின் ஒருபகுதியை—முதற் பகுதியை—ஒரு நிகழ்ச்சிகூட விடாமல் குறிப்பிட்டு விவரிக்கின்றது!

தினைப்புனத்தைக் காவல் காக்கவேண்டிய பொறுப்புடைய கானவனை, அவன் மனையாட்டி, தன் அன்பினுல் கள்ளூட்டி, அவனைத் தன் பொறுப்பைக் கைவிடச் செய்தாள். அவ்வாறே தலைவியைக் கண்காணிக்க வேண்டிய பொறுப்புடைய செவிலியை, தகப்பன் தன் ஆணையால் கட்டுப்படுத்தி அவளைத் தன் பொறுப்பை நழுவவிடச் செய்துவிட்டான்! துன்பப்படுபவர் கானவனும் செவிலியுமே! அவர்களைத் துன்பப்படவைத்த மனையாட்டியும் தகப்பனும் தாம் இவ்விளைவுகளை எதிர்பார்த்திருக்கவில்லை என்று கூறிக்கொள்ளலாம்! காவல் ஒழிந்திருந்த வேளையில், யானை புனத்தைக் கைப்பற்றிக் கதிர்களை உண்டது! அவ்வாறே செவிலியின் கண்காணிப்பு இல்லாத தலைவியைத் தலைவன் பற்றிக் கொண்டான். அதனுல் அவளுக்கு நோய் தோன்றிவிட்டது! தன் கொல்லைக்கு ஊறு விளைவித்த யானையைத் துரத்தியடிக்கக் கானவன் தன் நண்பர்

களையும் துணைக்கு அழைத்தான், அவ்வாறே செவிலியும் தன் மகளுக்கு வந்துவிட்ட நோயைத் தணிப்பிக்க அறிஞர் பலரையும் துணையாகக் கொண்டாள்!

யானையை எதிர்க்கச் சென்ற கானவனும், அவன் நண்பர்களும் பாம்பை ஒத்த சிலையையுடையவராய், ஆர்ப்பரித்துக்கொண்டு சென்றனர். செவிலியும் இன்றோடு இவள் நோய் நீங்கிற்று என்ற ஆரவாரத்துடன் பூசையையும், வெறியயர்தலையும், கட்டுப்பார்த்தலையும் செய்தாள். கானவர் ஆரவாரம் அவர்கள் எதிர்ப்பதனை விரும்பாத யானையின் பிளிறல் இவை இரண்டும் சேர்ந்து, ஊரில் உள்ளவர்களுக்கும் காட்டில் நிகழ்வனவற்றை உணர்த்தி விட்டன! அவ்வாறே செவிலியின் பேச்சுக்களும், தலைவியின் நோயின் கடுமையும் சேர்ந்து, ஒன்றும் அறியாதிருந்த அயலாரையும் தலைவியின் நிலையை அறிந்துகொள்ள வைத்துவிட்டன! இக்கதையின் தொடக்க நிகழ்ச்சியிலிருந்து, தோழி அறத்தொடு நிற்கச் செல்லும்வரை நிகழ்வனவற்றை ஒன்றுகூட விடாமல் இவ்வுவமம் குறிப்பிட்டுக் காட்டியிருக்கின்றது.

உய்விடம் அறியேம் ஆகி ஒய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவன் பொருந்தி
சூருறு மஞ்ஞையின் நடுங்க, வார்கோல்
உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலின்
புண்உமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்து புறம்கொடுத்த பின்னர்......

இஃது ஓர் உள்ளுறை உவமம். இது இப்பாடலில் வந்த நான்காம் ஓவியமாகும். மூன்றாம் ஓவியம் முடித்த இடத்திலிருந்து கதையின் முடிவுரை நிகழும் நிகழ்ச்சிகளை இவ்வோவியம் தொடர்ந்து குறிப்பிடுகின்றது. முன்னதைப் போலவே ஒரு நிகழ்ச்சியைக்கூட விடாமல் இது விவரமாய்க் குறிப்பிடுவதனைக் காண்கின்றோம்!

யானை பிளிறிக்கொண்டு வந்தது, நொதுமலர் மண முரசு இயம்பிய வண்ணம் வந்துசேர்ந்ததனைக் குறிப்பிடும். இதனால் எப்படித் தப்புவோம் என்று தெரியாமல் தலைவி யும் தோழியும் அஞ்சி நடுங்கினர் ; மணமுரசு கேட்டதும் அவர்கள் இவ்வாறே அஞ்சினர். வளை தடுப்பதனையும் கருதாமல், நாணத்தை மறந்து, அவர்கள் பயத்தால் நடுங் கியவர்களாய்த் தலைவனைச் சேர்ந்தனர். இச்செயல் அவன் களவொழுக்கத்தை வேண்டியதனைக் கருதாமலும், அவன் விருப்பத்துக்குத் தான் இணங்கவேண்டியதனைப் புறக் கணித்துவிட்டும் தலைவி அச்சத்துடன் தோழியைச் செவி லியினிடம் அறத்தொடு நிற்குமாறு தூண்டியதனைக் குறிப்பிடுகின்றது. அவனைச் சென்று சேர்ந்த பின்னரும் அவர்கள் நடுங்கியது, செவிலிக்குச் செய்தி சொல்லத் தொடங்கிய பின்னரும்கூட, அவள் யாய்க்கும், அவள் மூலம் தந்தை தன்னையர்க்கும் தெரிவிப்பதற்குள் அவர் கள் நொதுமலர்க்கும் மகட்கொடை நேர்ந்துவிடாமல் இருக்கவேண்டுமே என்று தலைவியும் தோழியும் அஞ்சி நடுங்கியதனைக் குறிப்பிடும்

முதல் இரண்டு ஓவியங்களினும் யானையைத் தலைவ னாக உருவகித்த ஆசிரியர், அடுத்த இரண்டு ஓவியங்களி லும் அதனைத் தலைவியின் பகையாக உருவகப்படுத்தியிருக் கின்றார். தலைவி தன் தகப்பனுடைய பாதுகாவலைத் துறந்துவிட்டாள் என்பதனை அவளும், தோழியும், தலைவ னும் நாமும் அறிவோம் ! ஆனால் அவளைப் பாதுகாத்த லைத் தம் கடனாகக் கருதியிருந்த செவிலி, தாய், தந்தை, சுற்றத்தார் இவர்களுள் எவருக்கும் இச்செய்தி தெரி யாதே ! இவர்களுக்குத் தலைவியின் செயல் தெரிந்ததும், இவ்வனைவரும் தம் அருமருந்தன்ன மகளை மனம் மாறச் செய்த தலைவனைச் சினப்பது இயல்பே ! தலைவி தன் இயல்பால் தன்னுடைய தகப்பன் பாதுகாவலைத் துறந்ததே உண்மையாய் இருப்பினும், இவ்வனைவருக்கும் இவ்விளக் கம் விளங்காது. தம் மகள் வற்புறுத்தப்பட்டாள்

என்றே இவர்கள் கருதுவர்! எனவே, தலைவியின் செயலை ஏற்றுக்கொள்ளும்வரை, இவர்கள் அனைவரும் தலைவனைத் தம் பகைவனாகக் கருதுவது இயல்பே! தலைவியை இன்னும் தகப்பன் பாதுகாவலில் இருப்பவளாகவே உலகம் மதிக்குமாகையால், அவளுடைய தகப்பனும் பிறரும் கருதிய வண்ணம் தலைவனைத் தலைவியின் பகைவனாகக் கருதுவது பிழையாகாது! பதினெண் பிராயம் வராத பெண் தனக்கெனச் சூழ்ந்துகொள்ளும் உரிமையைப் பெற்றவள் அல்லளே! எனவே, அவள் தகப்பனுக்குப் பகையாய் இருப்பது, அவளுக்கும் பகையேயாம்!

இதனால், முதலிரண்டு ஓவியங்களில் தலைவனைக் குறிப்பிடுவதாகவும், மூன்றும் ஓவியத்தில் நொதுமலரைக் குறிப்பிடுவதாகவும், இந்நான்காம் ஓவியத்தில் அதுவே தந்தை தன்னையரைக் குறிப்பிடுவதாகவும் கபிலர் உருவகித்திருப்பது மிகப் பொருத்தமுடைய செயலேயாம்! இவ்வெல்லா ஓவியங்களிலும் யானை தலைவியின் பகையைச் சுட்டிக்காட்டுவதாகவே பயின்று வருகின்றது. தகப்பன் பாதுகாவலில் உள்ளவள் மனத்தை மாற்றியதனால் தலைவன் பகை; அவள் ஒழுக்கத்துக்கு ஊறுவிளைவிக்கவந்தமையால் பின்னர் நொதுமலர் பகை; இனி அவள் செயலை ஏற்றுக் கொள்ளும்வரை அவளுடைய தந்தையும் தன்னையருமே அவளுக்குப் பகையாம்!

வார்கோல் உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசையுடன் அவன் அண்ணல் யானையின் அணிமுகத்து அழுத்தியது செவிலி தப்பாமல் தன் விருப்பத்துக்குத் தந்தை தன்னையரை இசையவைக்கும் திறனுடைய தாயை அவர்களுக்குச் செய்தியைக்கூற விடுத்ததனைக் குறிப்பிடும். பகையாக வந்த யானையையும் அண்ணல் என்றும், அணிமுகத்தையுடையது என்றும் கூறியது, பகையாகத் தோற்றம் அளிப்பவரேனும் தந்தையும் தன்னையரும் தலைவியினிடம் அன்புடையவரே என்பதனைக் குறிப்பாய்ப் புலப்படுத்து

கின்றது. மேலும் இவ்யானை முன்னர் இரு ஓவியங்களில் தலைவனைக் குறிப்பிடப் பயன்பட்டதன்றோ? தலைவன் விட்ட அம்பு யானையின் நெற்றியில் புண்ணையுண்டாக்கி, அதன் முகத்தை இரத்தம் படிந்ததாகச் செய்துவிட்டது! அவ்வாறே தாயின் சொற்கள் தந்தை தன்னையரின் நெஞ்சைத் தைத்து, அவர் முகங்களைச் சினம் கவ்விக் கொள்ளச் செய்தன. உதிரம் பரந்து யானையின் அழகுப் புள்ளிகளை மறைத்தது, இச்செய்தியின் விளைவாய்த் தோன்றிய சினம் தந்தை தன்னையர் தலைவியினிடத்துக் கொண்டிருந்த அன்பை மறைத்ததனைக் குறிப்பிடும். பரந்த உதிரம் கழுவப்பெற்றதும், யானையின் முகம் அழகுடன் விளங்கும். அவ்வாறே சினம் ஆறியதும், அவர்கள் தலைவியை முன்போல் அன்புடனும், பரிவுடனும் பேணுவர். யானை நிற்கமாட்டாமல் சோர்ந்து விட்டது, தந்தை தன்னையர்; சினம் தணிந்தபின், இயல்பாய் நிகழ்ந்த ஒரு செயல், தலைவியால் விரும்பி மேற்கொள்ளப்பட்ட ஒழுக்கம் தம்மை மகிழ்வூட்டும் எனக் கருதாமல், அதனைச் சினமூட்டியதாகக் கொண்டமைக்கு அவர்கள் கவன்றதனைக் குறிப்பிடுகின்றது. யானை புறங் கொடுத்தது என்றது, தந்தை தன்னையர் தாம்விரும்பிய வண்ணம் தலைவி ஒழுகக் கடமைப்பட்டவள் என்ற கருத்தைக் கைவிட்டதனைக் குறிப்பிடும். இதனால் அவர்கள் இத்தலைவியையும் தலைவனையும் மன்முவந்து மணக் கோலத்திற்காண விழைவர்.

பழுமிளகு உக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி யுதிர்ந்தென
புள்ளெறி பிரசமொடு ஈண்டி பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத்து அயின்ற தோகை வியலூர்
சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட்டு இன்இயம் கறங்க ஆடுமகள்
கயிறூர் பாணியின் தளரும்.

இப்பகுதியால் களவு ஒழுக்கத்தின் இயல்பை ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். இதனை இறைச்சியாகக் கொண்டு இருவிதப் பொருள்களைப்பயப்பதாகக் கொள்ளலாம். நச்சினார்க்கினியர் கூறியிருத்தலைப்போல உள்ளுறை உவமமாகவும் கொள்ளலாம். இதுவே இப்பாடலில் உள்ள ஐந்தாம் ஓவியம்.

மலையில் உள்ள மயில் தன் விடாயைத் தீர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் சுனைநீரைக் குடித்தது. ஆனால் அந்நீர் கள் கலந்ததாய் இருக்கவே மனமயக்கத்தை எய்திற்று; தளர்ந்த நடையையுடையதாக ஆகிவிட்டது. மதிமயக்கத்தால் தளர்ந்து நடக்கின்றதேனும், அதனுடைய நடை அழகுடையதாகவே காணப்படுகின்றது. குழந்தைகளின் தளர்நடை மகிழ்ச்சியையே ஊட்டும். இவ்விரு காட்சிகளைக் காணுங்காலத்து நம்மை மகிழ்விப்பது தளர்நடை யன்று ? 'தவறிவிழுபவர்தம்மைப் பெற்ற தாயும் கண்டு சிரிப்பாள்' எனக்கவியரசர் பாரதியார் கூறியிருப்பதனை உணர்க. நம்மைக் கேலி தோன்றச் சிரிக்க வைக்காமல், மகிழ்ச்சியுடன் புன்முறுவல் பூக்கச் செய்வது நாம் மயிலினிடத்தும், குழந்தையினிடத்தும் இயல்பாய்க் கொண்டுள்ள அன்பேயாம்

தலைவி தன்னை விரும்புவதனைத் தெரிந்துகொண்ட தலைவன் அவளைக் களவொழுக்கத்தைக் கைக்கொள்ளத் தூண்டி ஒப்பவைத்து விட்டான். அவன் இவ்வாறு செய்தது தனக்கு இவ்வொழுக்கம் இன்பத்தையும் மன நிறைவையும் பயக்கும் என்றுகருதியேயாம்! ஆனால்அவன் எதிர்பார்த்திருந்ததற்கு மாறாக, தலைவி அவனை இரவுக் குறியில் காணமுடியவில்லை. இது அவளுடைய குற்றம் ஆகாது! விடாயைத் தீர்த்துக்கொள்ள நீரைக்குடித்த மயில், மயக்கத்தைப் பெற்றதனைப் போல, அவனும் இன்பத்தை விரும்பி மேற்கொண்ட ஒழுக்கம் ஏக்கத்தைத் தந்து விட்டதனை உணர்ந்து கொண்டான்!

மயிலுக்கு மயக்கம் தோன்றிவிட்டது; அது நடக்க மாட்டாமல் தளர்ந்து செல்கின்றது! எனினும், அதனுடைய நடை காண்பவருக்கு அழகுடையதாகவே இருக்கின்றது. அவ்வாறே இரவுக்குறியில் ஒருவரையொருவர் எதிர்ப்பட மாட்டாமல் காதலர் இருவரும் ஏங்கி உருகுகின்றனர்! எனினும் என்ன? இவ்வேக்கம் பெரும் பயனை நல்கும் என்பது ஆசிரியர் தீர்ப்பு! இது இவர்களை ஒருவரையொருவர் பெரிதும் விரும்பச் செய்யும்! இவர்களை விரைவில் திருமணம் செய்துகொள்ளத் தூண்டும்; இறுகப் பிணைக்கும். மனவெழுச்சியைப் பெறக் கள்ளுண்பவர் கள்ளை விரும்புகின்றனர்; அதனைப்பெற்ற நிலையில், மயிலும் இக்காதலரும் இருக்கின்றனர்! ஆனால் இவர்கள் தம் நிலையை அறிந்திருக்கவில்லை. எனினும் பலன் கிடைக்காது போகுமா?

> சாரல், வரையர மகளிரின் சாஅய் விழைதக
> விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்
> தண்கமழ் அலரி தாஅய் நன்பல
> வம்புவிரி களத்தின் கவின்பெறப் பொலிந்த.

இது உள்ளுறை உவமம். இப்பாடலில் வந்த ஆறும் ஓவியம் இதுவே! இது தலைவியின் நிலையைப் புலப்படுத்துகின்றது. இதனைத் தலைவனுடைய பண்பினைப் புலப்படுத்துவதாக நச்சினார்க்கினியர் விரித்துரைத்துள்ளார்! உயர்ந்த சிகரங்களில் இருந்த காந்தள் செடிகள் தம் பூக்களைச் சிதறி, மலைச்சாரல்களை அழகுறுத்தும்! இது தலைவி தானே விரும்பித்தலைவனை ஏற்றுக்கொண்டதனைக் குறிப்பிடுகின்றது. தலைவன் விரும்பி இவளை ஒழுக்கமுடையவளாக ஆக்கியதனைக் குறிப்பிடுகின்றது என்றும் கொள்ளலாம்.

ஐந்து, ஆறும் ஓவியங்கள் இரண்டும் இருவிதப் பொருள்கள் கொள்ளக் கிடக்கின்றன. இவற்றிற்குக் கூறப்படும் இரு பொருள்களும் பொருந்துவனவே. இவற்றால் இவ்வோவியங்கள் பொருட்செறிவு மிக்கன என்பதனைத்

தெளியலாம். படிப்பவர் தம் அறிவாற்றல்களுக்கு ஏற்ப, ஆசிரியர் கருதியிராத, ஆனால் பொருந்தக்கூடிய வேறு பொருளையும் ஏற்றுக்கொள்ளக்கூடிய தன்மை ஓவியங்களுக்கு உண்டு! இவ்வியல்பு இவற்றின் சிறப்பைப் புலப்படுத்தும்.

சாறுயர்ந் தன்ன மிடாச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருண
பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி யடிசில்
வசையில் வான்திணை புரையோர் கடும்பொடு
விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னொடு உண்டலும் புரைவது.

இப்பகுதி சொற்றொடர்களாகிய ஒரு குறியீட்டு ஓவியம். இது தலைவன் சொற்களால் அமைந்துள்ளது. அவனுடைய விருப்பத்தையும், அதனோடு கொண்ட தொடர்பினால் தலைவி எப்படி மேன்மையுறுவாள் என்பதனையும் இப்பகுதி விவரிக்கின்றது. இவர்களுடைய தொடர்பு இவ்விருவரையும் நாற்பயனைப் பெறவைக்கும் என்ற செய்தி இப்பகுதியால் வெளிப்படுகின்றது. எனவே இது ஓவியமாய்க் கருதப்படும் நிலையை எய்துகின்றது. இதனோடு இப்பாடலில் கூறப்படும் கதையும் முடிவு பெறுகின்றது. மேல்வரும் பகுதி இக்காதலரின் களவொழுக்கம் எவ்வாறு இவர்களை நிலைபெற்ற இன்பத்தை விரும்புமாறு தூண்டுகின்றது என்பதனை உணர்த்துகின்றது. ஆகவே, இது கதையின் பயனை வற்புறுத்தும் ஒரு முடிவுரையாய்த் திகழ்கின்றது.

இப்பாடலில் உள்ள ஓவியங்களை மட்டும் பெயர்த்து எடுத்துக் கொண்டோம் எனின், அவற்றைக் கொண்டே இதனுள் கூறப்பட்டிருக்கும் கதையை நாம் உருவாக்கி விடக்கூடும்! இவ்வாறு தாம் வந்த இடங்களை விளக்குவதனோடு நின்றுவிடாமல், இவ்வோவியங்கள், தாம் விளக்கும் கதையை முற்றிலும் உருவாக்கித் தரும் முறை

யில் தொடர்புடையனவாய் இருப்பது வியக்கத்தக்கது. இதனால் இவ்வோவியங்கள் ஒரு பிண்டத்தின் பலஉறுப்பு களைப்போல் காணப்படுகின்றன. இத்தகைய அமைப்பு முறையை நம் இலக்கியத்தில் முதன் முதலில் வகுத்மைத்த பெருமை கபிலரைச் சேரும். இதனை உணர்ந்து வியந்த இளங்கோவடிகள், ஓவியங்களின் இவ்வமைப்பு முறை யைத் தாமும் கையாண்டுள்ளார். அவருடைய அளப்பரிய திறன் காரணமாக அவர் அமைத்துள்ள மாலைகள் மேலும் பொலிவுடையனவாய் விளங்குகின்றன. உவமை யொன் றின் வாயிலாகக் கூறுமிடத்து, கபிலர் சுரங்கம் ஒன்று இருக்குமிடத்தைக் காட்டியிருக்க, அதனை அடிகள் தோண்டி எடுத்து அனைவருக்கும் வாரி வழங்கியிருக்கின் றார் எனக் கூறலாம்!

———

